# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – புரட்டாசி

2024–அக்டோபர்

இணையவழி மலர் 2 – இதழ் 2

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்


## பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



### சீர் வளர் சீர்

## நாராயண ஞான தேசிக சுவாமிகள்

### கோவிலூர் ஆதினகர்த்தர்

**காசி வேத பாடசாலை அன்னப் பிரசாதம்**

இந்தியாவின் ஆன்மீகத் தலைநகரம் காசி ஆகும். காசி விசுவநாதரைத் தரிசிப்பதும், காசியில் அன்னதானம் செய்வதும், அறங்கள் செய்வதும் மிக மிகப் புண்ணியம் தரும் செயல்கள் ஆகும். பல மாநிலத்து மக்களும் காசிக்கு வருவதும், விசுவநாதரை தரிசிப்பதும், அறங்கள் செய்வதும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டே வருகிறது. இருநூற்று ஐம்பது ஆண்டு காலமாக தமிழகத்து நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் காசியில் சத்திரம் அமைத்து, நாள்தோறும் விசுவநாதருக்கு அபிஷேகப் பொருள்கள் தந்து, அன்னதானம் செய்து வருவது உலகம் அறிந்த சிறப்பான செயல்களாகும். நகரத்தார் இனத்திற்கு இது மேலும் மேலும் புண்ணியங்களை அள்ளி அள்ளித் தருவதாக விளங்கி வருகிறது. இப்பணியைக் கண்டும் பங்கு கொண்டும் நகரத்தார்கள் நலம் பெற்று வருகிறார்கள்.

நகரத்தார்தம் பணிகளின் செம்மை கருதி காசி விசுவநாதர் திருக்கோயில் அறக்கட்டளை பல பொறுப்புகளை நகரத்தார்களுக்கு அளித்து வருகிறது. காசியில் பல வேத பாட சாலைகள் இயங்கி வருகின்றன. இப்பாட சாலைகளில் நான்காயிரம் மாணவர்களுக்கு மேல் வேத பாடங்களைக் கற்று வருகின்றனர். இவர்களுக்கு மதிய உணவளித்து இவர்களின் உடல், மன, கல்வி நலனைப் பெருக்க காசி விசுவநாதர் அறக்கட்டளை முன்வந்தது. அப்பணியைக் கோவிலூர் மடாலயத்துடன் இணைந்து செய்திட காசி விசுவநாதர் திருவருள் கூட்டியது.

தமிழகத்து உணவுகளைத் தரமாக, நயமாக, நலமாக, திட்டமிட்டு தயாரிக்கும் பணியைச் செய்து வந்த நம் முன் தொடர்பிற்கு ஒரு காரணம் இருந்திருக்கிறது. காசியில் விசுவநாதரின் மண்ணில் வேத விற்பன்னர்களுக்குத் தரமாக, நயமாக, திட்டத்தின் அடிப்படையில் உணவினைத் தயாரிக்கும் பணியைச் செய்வதற்கான பக்குவத்தைத் தருவதற்காகவே, முன் தொடர்பில் தென்னிந்திய உணவு தயாரிப்பு வாய்ப்பினை எம்பெருமான் அமைத்துத் தந்துள்ளார் என்றே எண்ணத் தோன்றுகிறது.

சீரக சாதம், பருப்பு, சப்பாத்தி, காய்கறி , தொடுகறி என்ற நிலையில் அமைந்த உணவு முறையை வேதம் படிக்கும் மாணவர்களுக்கு நாளும் வழங்க வேண்டும் என்ற வேண்டுகோளை, நமக்கு காசி விசுவநாதர் கோயில் அறக்கட்டளை வைக்கின்றது. தொடக்கத்தில் தென்னிந்திய உணவினை வழங்க எண்ணம் கொண்டு இத்திட்டத்தில் இணைந்த நமக்கு, காசிக்கு இனிய உணவினை வழங்கக் கட்டளையிடுகிறார் விசுவநாதர். அதனையும் ஏற்று நாம் தென்னிந்திய உணவு தயாரிப்பிற்காக நிறுவி



வேத பாட சாலை மாணவர்களுக்கும் இத்திட்டம் விரிவு பட இருக்கிறது.

இத்திட்டத்தின் துவக்கவிழா மிகச் சிறப்போடு நடைபெற்றது. நாம் எதேச்சையாக தமிழகத்தில் இருந்து வாங்கிச் சென்றிருந்த அன்னபூரணி ஐம்பொன் சிலையை ஆதாரமாக நிறுவி, அதற்கான சன்னதி அமைத்து, காசி விசுவநாதருக்கு நாளும் பூசை செய்யும் பாண்டா எனப்படும் பூசகர் வந்து, இவ்வன்னதானத்தை நம் கரங்களால் தொடங்கி வைத்த அந்நேரம் காசி விசுவநாதரின் ‘‘ பிச்சாந்தேகி பகவதி பிச்சாந்தேகி ” என்ற குரல் உலகெங்கும் நிறைந்துக் கேட்பதாக உணர முடிந்தது. காசி விசுவநாதர் கோயில் அறக்கட்டளையின் சார்பில் பல அதிகாரிகள் வருகை தந்து இவ்விழாவில் கலந்து கொண்டு உணவுண்டு மகிழ்ந்தனர். இத்தயாரிப்புப் பணியைக் கவனிக்க தனி அதிகாரியைக் காசி திருக்கோயில் ஏற்பாடு செய்துள்ளது. சிவப் பிரசாதம் செய்ய வைத்த எம்பெருமான் கருணையை எவ்வாறு போற்றுவது.

ஒவ்வொரு நாளும் தயாரிக்கப்படும் உணவு உரிய முறையில் தரம் பார்க்கப்பெற்று, உரிய பள்ளியின் பெயர் ஒட்டப்பெற்று, உள்ளிருக்கும் பொருளின் அளவு பெயர் முதலானவை குறிக்கப்பெற்று, ஒதுக்கப்பெற்ற வாகனத்தில் ஏற்றி, அது சென்று உணவு பரிமாறி திரும்ப உணவுக்கலங்கள் வந்து, சரிபார்க்கப் பெற்று, அடுத்த நாளுக்கான உணவு ஏற்பதற்காக தயாரிப்பு செய்து, இப்படிப் பல பணிகள் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டே இருக்கின்றன. 3000 மேலாக சப்பாத்திகள் மதிய உணவிற்காக காலை ஒன்பது மணியளவில் தயாரிக்கப்படுகின்றன என்றால் இதன் வேகத்தையும் நேர்த்தியையும் கணக்கு பார்த்துக் கொள்ளலாம். இவ்வகையில் காசியில் அன்னதானம் செய்யும் அரும் திருப்பணிக்குக் கோவிலூர் மடலாயம் உதவ வேண்டும் என்ற

யிருந்த இயந்திரங்களை வட இந்திய உணவு தயாரிப்பிற்கென சற்று வடிவத்தைத் திருத்தி, புதிதாக சில இயந்திர மாதிரிகளை உருவாக்கி வட இந்திய உணவு தயாரிக்கும் பணி அக்டோபர் பதினாறாம் தேதி அன்று தொடங்கப்பட்டது.

முதலாவதாக உணவு தயாரிப்பு முன்னோட்டமாக ஐநூறு பேருக்கு உணவு தாயிரிக்கப் பெற்று, காசி விசுவநாதர் கோயில் அறக்கட்டளை தந்துள்ள அன்னதானக் கட்டடத்தினைச் சுற்றியுள்ள மக்களுக்கு அவ்வுணவு வழங்கப்பெற்றது. அவர்கள் அதனை ருசித்து உண்டதன் வாய்ப்பாக இப்பணி சிறப்புடன் தொடர்கிறது.

புதிய சூழல், புதிய உணவு வகைகள், புதிய சுவை, புதிய இயந்திரங்கள், புதிய பணியாளர்கள், புதிய மொழி, புதிய கலாச்சாரம், இயந்திரக் கோளாறுகளைச் சீரமைத்தல் போன்ற பல சவால்கள் இருந்தும், காசி விசுவநாதரின் அருளால் சிறப்புடன் வேத பாட சாலை அன்னதானத் திட்டம் தொடர்ந்து வெற்றி நடை போட்டு வருகிறது. நமக்கு மற்ற பணிகள் பல இருந்தபோதும் ஒரு மாத காலமாக காசியில் இருந்து இத்தயாரிப்புப் பணியைச் செம்மைப் படுத்த வேண்டியிருந்தது. தற்போது மதிய உணவு அளிப்பதற்கான புதிய சமையல் திட்டம் மென்பொருள்கள், இயந்திரங்கள், மேற்பார்வை, கணினிப் பயன்பாடு போன்றன கொண்டு உருவாக்கப்பெற்றுவிட்டது. உலகிற்கோர் புதுமையாக இச்சமையல் திட்டம் அமைந்துள்ளது. இதன் வளர்ச்சியாக காசியில் உள்ள அனைத்து

இறைகட்டளை இனிதாக நடைபெற்று வருகிறது. இதனைக் காண, இதில் பங்களிக்க அனைவரையும் வேண்டுகிறோம்.

### நமக்கான இணைய நூலகச் சேவை தேவை

தொடர்ந்து நமது கோவிலூர் மடாலயத்தின் அரும் பணிகளில் ஒன்றான, அரிதான நூல்கள் ஆவணப்படுத்தும் பணியில் சில சவால்கள் ஏற்பட்டுள்ளன. ஏறக்குறைய ஐயாயிரத்திற்கு மேற்பட்ட நூல்கள் இதுவரை மின் ஆவணமாக ஆவணப்படுத்தப்பெற்றுள்ளன. இவற்றை அனைவரும் பயன்படுத்த ஆர்க்கியுஸ் என்ற இணைய தளத்தினை இணைய இருப்பிடமாகக் கொண்டு இதுவரை பயன்படுத்தி வந்தோம். தற்போது அத்தளம் சில காரணங்களால் முடக்கப்பெற்றுள்ளதாக அறிய வருகிறது. இருப்பினும் இத்தளம் இன்னும் சிறிது நாட்களில் உயிர்ப்பிக்கப்படலாம். நாம் இதற்கான மாற்று வழியைக் கண்டறிய வேண்டும். ஐயாயிரம் நூல்களும் நமது கையிருப்பில் மின் ஆவணமாக இருக்கின்றன. இவற்றை மக்கள் பயன்படுத்தும் விதமாக அமைக்க திருவருள் துணை செய்யவேண்டும்.

### நகரத்தார் புள்ளிகள் பெருகிட

தொடர்ந்து பல சமுதாயப் பணிகளையும் நாம் முன்னெடுத்து வருகிறோம். சென்ற முறை கோவிலூரில் நகரத்தார் கோயில் நிர்வாகிகளின் கூட்டம் சிறப்புடன் நடைபெற்றது. அதில் பல முன்முடிவுகள் எடுக்கப்பெற்றன. அதனைத் தொடர்ந்து பல இடங்களிலும் இது குறித்தான ஆலோசனைகள், கூட்டங்கள் நடைபெற்று வருகின்றன. 13.10.2024 அன்று பிள்ளையார்பட்டி நகரத்தார்கள் இனி வருங்காலத்தில் இரணிக் கோயில் சார்ந்த நகரத்தார்களுடன் திருமண பந்தத்தைச் செய்து கொள்ளலாம் என்று முடிவெடுத்துள்ளனர். இம்முடிவு வரவேற்கத் தக்கது.

கடந்த காலங்களில் நகரத்தார் சாதி முறை நியாயங்கள் என்ற அடிப்படையில் சில நியாயங்கள் நகரத்தார்களால் பின்பற்றப்பெற்று வந்துள்ளன. ‘‘இரணியூரும் பிள்ளையார்பட்டியும் சகோதர்களானதால் இவர்கள் தம்முள் திருமணம் செய்யாதிருத்தல்’’ என்ற நடைமுறை இதுவரை பின்பற்றப்பெற்று வந்தது. இது தற்போது இரு கோயில்களின் பங்காளிகளாலும் மாற்றம் பெற்று திருமண பந்தம் செய்து கொள்ளலாம் என முடிவு எடுக்கப்பெற்றுள்ளது. இது நகரத்தார் புள்ளி பெருகுவதற்கான நல்வாய்ப்பாகும். இம்முடிவை நகரத்தார் பெருமக்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும். நகரத்தார்கள் அனைவரும் இளையாற்றங்குடியை அடிப்படையாக வைத்து ஒன்பதாக வளர்ந்துள்ள நிலையில் அனைவரும் ஒரு கொடிப் பிள்ளைகள் என்ற கருத்தையும் நினைத்துப் பார்க்க வேண்டும். ஒரு கொடிப் பிள்ளைகளில் சிலரை மட்டும் சகோதரர் உறவினர் என்று கொள்வது பொருத்தம் அல்ல. இது ஒரு காரணம். மேலும் நகரத்தார் மரபியல் ஆய்வாளர் திரு பிச்சப்பன் அவர்களின் கூற்றுப்படி நகரத்தார் பல்வேறு குழுக்களாக செட்டி நாட்டுப் பகுதிகளுக்கு வருகை தந்து வட்டகையாகி தமக்குள் திருமண உறவினைக் கொண்டனர் என்ற கருத்தும் இங்கு எண்ணத்தக்கது. இப்படி பல காரணங்களால் நகரத்தார் திருமண உறவில் உரிய முன்னேற்றங்கள் ஏற்பட வேண்டும். இதற்கான ஒரு முன்னேற்றம் பிள்ளையார்பட்டி நகரத்தார்களும் இரணிக்கோயில் நகரத்தார்களும் கூடி முடிவெடுத்தது.

நகரத்தார் இனம் வளர இன்னும் நாம் செய்ய வேண்டியன பலவாக உள்ளன. நகரத்தார் இளைஞர்கள், பெண் பிள்ளைகள் அனைவருக்கும் உரிய பருவத்தில் திருமணம் நடைபெற வேண்டும். திருமணம் ஆகாத, தள்ளிப் போகிற நிலை குறைய வேண்டும். ஏற்படுத்திக் கொண்ட திருமண உறவின் இன்றியமையாமை உணர்ந்து இல்லற உறவின் மேன்மையைக் காக்க வேண்டும். முறிவுகள் இல்லாமல் போக வேண்டும். நகரத்தார் இன ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொள்ள முறை, தலை ( தலைக்கான பெரும்பணம்) போன்ற பொருளாதாரத் தடைகள் இல்லாமல் போக வேண்டும். நகரத்தார் இனம் வளம் பெற நல்ல மனம் வேண்டும்.

### முருக மாநாடு

கோவிலூர் மடாலயம் ஆன்மீக, கல்வி, சமுதாயப் பணிகளில் முன்னின்று வருகிறது. தற்போது அழகப்பா பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற கல்லூரிகள் அளவிலான கபாடிப் போட்டியில் நமது நாச்சியப்பசுவாமிகள் கலை மற்றும் அறிவியல் கல்லூரி முதன்மை பெற்று மாநில அளவில்




விளையாட உள்ளது. விளையாட்டு வீரர்களுக்கு வாழ்த்தும் பாராட்டும். இக்கல்லூரியின் வாயிலாக பழந்தமிழர் வாழ்வியலும் முருக வழிபாடும் என்ற தலைப்பிலான பன்னாட்டுக் கருத்தரங்கு 2025ஆம் ஆண்டு பிப்ரவரி ஏழாம் நாள் நடைபெறத் திட்டமிடப் பெற்றுள்ளது. இதற்கான ஏற்பாடுகளை கல்லூரி நிர்வாகம் செய்துவருகிறது. இதற்கு உலக அளவிலான முருக அன்பர்களை அழைக்கிறோம்.




கருத்தரங்கம் குறித்த கூடுதல் தகவல் அறிய மேல்வரும் இணைப்பை பயன்படுத்தவும்.



நமது ஆதீனத்தின் முன்னவர், பல்கலை ஞானம் பெற்ற சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளின் குருபூசை சிறப்புடன் கொண்டாடப் பெற்றது. இதில் வேதாந்த அன்பர்களும் பொது மக்களும் கலந்து கொண்டு அருள்பேறு பெற்றனர். சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் நல்லாசி நாளும் நல்லருள் கூட்டிக் கொண்டே இருக்கின்றது. வாழிய நலம்.

சிறப்பான தீபாவளித் திருநாள் வாழ்த்துகள். நன்மை பெருகி நாளும் உயர்வடைய உங்கள் அனைவருக்கும் எமது நல்வாழ்த்து.

# நல்வழி பாடல்கள்

ஆவாரை யாரே அழிப்பர் அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர் ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்அம் புவியதன் மேல்

**விளக்கம்:**

வாழ வேண்டும் என்று விதி உடையவரை, என்ன முயற்சி செய்தாலும் எவரும் கொல்ல முடியாது. அது போல் இறக்க வேண்டும் என்ற விதி உடையவரை யார் தடுத்தாலும் வாழ வைக்க முடியாது, எத்தனை முயற்சி செய்தாலும் முன்னேற்றம் அடையாமல் பிச்சை எடுக்க வேண்டும் என்ற விதி உடையவரை யார் காப்பாற்ற முடியும். இது தான் இந்த பூமியில் கண் கண்ட உண்மை. ஒருவரை காப்பாற்றவோ அழிக்கவோ விதியைத் தவிர வேறு ஒருவராலும் முடியாது, அவர் அவரின் வினைக்கேற்ப உள்ள பலன்களை அனுபவித்துத் தான் ஆக வேண்டும்.

---

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை – சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது
உயிர்விடுகை சால உறும்

**விளக்கம்:**

நல்ல குடியில் பிறந்தவர்கள் வயிறு வளர்பதற்காக அடுத்தவரை அண்டி, அவரை புகழ்ந்து பிச்சை வாங்கி வாழ்வது சீச்சீ என்று கூறும் அளவிற்கு இழிவான செயலாகும். இப்படி மானம் விட்டு உயிர் வாழ்வதை விட இறப்பது மேல்.

## கோவிலூரின் கதை - 10

# சீர் வளர் சீர்
# இராமநாத ஞான தேசிக சுவாமிகள்(II) வரலாறு




சீர் வளர் சீர்
இராமநாத ஞான
தேசிக சுவாமிகள் (II)
வரலாறு
(10ம் பட்டம்)



**- முனைவர் மு.பழனியப்பன்**
**தமிழ்த்துறைத் தலைவர்,**
**அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,**
**திருவாடானை**

சீர்வளர்சீர் இராமநாதசுவாமிகளால் இளைய பட்டமாக அறிவிக்கப்பெற்ற பெருமைக்கு உரியவர் சீர் வளர் சீர் அரு.இராமநாதசுவாமிகள் ஆவார். இவர் அரிமழத்தில் திரு செல்லப்ப செட்டியார் திருமதி மீனாட்சி ஆச்சி ஆகியோருக்குப் பிள்ளையாகப் பிறந்தார். தன் கல்வியை

அரிமழத்தில் கற்று முடித்தார்.

இதன்பின் ஞான நாட்டம் ஏற்பட்டு காளையார் கோயிலில் அமைந்துள்ள செல்லப்ப சுவாமிகள் மடத்திற்குச் சென்றார். தனது இருபதாவது வயதில் காளையார் கோயிலில் இருந்த அருணாசல சுவாமிகள் ஞானக் கல்வி பெற்றார். அவரிடம் வேதாந்தப் பாடத்தையும், தீட்சையையும் பெற்றுத் துறவறம் பூண்டார்.

ஆயிரத்துத் தொள்ள யிரத்து எழுபதாம் ஆண்டு முதல் காளையார் கோயில் செல்லப்ப செட்டியார் மடம், மதுரை குட்டைய சுவாமிகள் மடம் ஆகியவற்றில் தன் ஞானப் பணியை மேற்கொண்டார். இதன்பின் சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடத்தின் பணிகளிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுச் செயல்பட்டார்.

ஆயிரத்துத்தொள்ளாயிரத்து எழுபத்தாறாம் ஆண்டு முதல் கோவிலூர் மடத்தின் இளையபட்டமாக இவர் முன்னிருந்த சுவாமிகளால் நியமிக்கப்பட்டார். கோவிலூர் ஆண்டவர் மன்றத்தின் தலைவராக இவர் பணியாற்றினார்.

இவர் ஆயிரத்துத் தொள்ளா யிரத்து எழுபத்து மூன்றாம் ஆண்டில் காசி யாத்திரை மேற்கொண்டார். பன்னிரு சோதிர்லிங்கத் தலங்களையும் இவர் வழிபட்டு வந்தார். காளையார் கோயிலில் விழாக்களைச் சிறப்பாக நடத்தி வெற்றி கண்டவர் இவர். இவ்வாறு இவரின் ஆன்மீகப் பணிகள் தொடர்ந்தன.

இவர் ஆயிரத்துத் தொள்ளா யிரத்து எண்பத்து இரண்டாம் ஆண்டு முன்னவர் நிறைவாழ்வு ஏற்றபோது கோவிலூர் மடத்தின் பத்தாம் மடாதிபதியாக அமர்ந்து சீர் வளர் சீர் அரு. இராமநாத ஞான தேசிக சுவாமிகள் என்ற பெயர் பெற்று அருளாட்சி ஏற்றார். தொடர்ந்து நான்கு ஆண்டுகள் இறைப்பணியாற்றி நிறைந்தார்.

# சீர் வளர் சீர் காசிவிசுவநாத ஞான தேசிக சுவாமிகள் வரலாறு




சீர் வளர் சீர் காசிவிசுவநாத ஞான தேசிக சுவாமிகள் (1986 1995) (11ம் பட்டம்)

முன்னவரான சீர் வளர் சீர் அரு. இராமநாத ஞான தேசிகர் நிறைவாழ்வு பெற்றபோது, சீர் வளர் சீர் காசி விசுவநாத ஞான தேசிக சுவாமிகள் பதினொன்றாம் பட்டமாக அருளாட்சி ஏற்றார். இவர் வேதாந்தத்திலும், திருமந்திரம், சித்தர் பாடல்கள் ஆகியவற்றிலும் ஈடுபாடு உடையவர். வேதாந்த வகுப்புகள் பலவற்றை இவர் நடத்தினார். மேலும் ஏழைகளுக்கு அன்னதானம், வஸ்திர தானம், மருந்துதானம் போன்றவற்றையும் வழங்கி அற நிலையமாக கோவிலூர் மடத்தை விளங்க வைத்தார். ஏழை மாணவர்களுக்குக் கல்வி சிறக்கவும் பணி செய்தார்.

இவரின் காலத்தில் இலக்கியப் பூங்கா என்னும் கருத்தரங்கு நிகழ்ச்சி திங்கள் தோறும் நடத்தப்பட்டது. இவரின் காலத்தில் இளம் பிள்ளைகள் படிக்க ஏற்ற வகையில் ஞானப் புத்தகங்கள் வெளியிடப்பெற்றுள்ள. மடத்தின் நிர்வாத்தையும் அதன் கணக்குகளையும் சரிவர நடை பெற வைத்தார்.

இவ்வாறு பல பணிகளை ஆற்றிய சீர் வளர் சீர் காசி விசுவநாத ஞான தேசிக சுவாமிகள் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து தொண்ணூற்றைந்தாம் ஆண்டு நிறைவாழ்வு பெற்றார்.





# சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளின்

# பதிமூன்றாவது குருபூசை விழா



கோவிலூர் மடாலயத்தின் பன்னிரெண்டாவது பட்டமாக இருந்து அருளாட்சி செய்த சீர்வளர்சீர் நாச்சியப்ப சுவாமிகளின் பதிமூன்றாவது குருபூசை புரட்டாசி மாதம் 23ஆம் நாள் கோவிலூர் வேதாந்த மடத்தில் நடைபெற்றது.

அதனை ஒட்டி புரட்டாசி மாதம் 22, 23 (அக்டோபர் 08, 09) ஆகிய இருநாட்கள் குருபூசை நிகழ்வுகள் நடைபெற்றன. 810 2024 அன்று காலை 10.00 மணி அளவில் திருவாசகம் முற்றோதல் செய்விக்கப் பெற்றது. அன்று மாலை 400 மணியளவில் குருபூசையை ஒட்டி நடத்தப்பெற்ற பள்ளி, கல்லூரி அளவிலான பல்வேறு போட்டிகளில் பங்குபெற்றுப் பரிசு பெற்ற 163 மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன.



09.10.2024 அன்று காலை 6.00 மணியளவில் சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளின் அருட்கோயிலின் மீது அமர்ந்துள்ள சிவபெருமான் திருவுருவத்திற்கு அபிடேகம் சிறப்புடன் நடைபெற்றது.



சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள் அபிடேக ஆராதனைகளைச் சிறப்புடன் செய்வித்து குருவருள் வழங்கினார்கள். இதுபோது கோவிலூர் மடாலய தேவாரத் திருமுறை இசைப்பள்ளி மாணவர்களின் தேவார இசை பாடப்பெற்றது.



கைவல்ய நவநீதம் முற்றோதுதல் நிகழ்வும் இதனோடு நடைபெற்றது. இதனைத் தொடர்ந்து, மகேஸ்வர பூசை நடந்தது. பல ஊர்களில் இருந்து அடியார் பெருமக்களும், வேதாந்த அன்பர்களும் வந்திருந்து குருபூசையைச் சிறப்பித்தனர். மேலும் இந்நிகழ்வில் கோவிலூர் மடலாயக் கல்விக் குழும ஆசிரியப் பெருமக்களும் அலுவலர்களும் உதவியாளர்களும் மாணவர்களும் பொதுமக்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

அன்று முற்பகல் 11.00 மணியளவில் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் சார்பாக, கோவிலூர் கல்விக் குழுமத் தாளாளர் முனைவர் மா.வீரப்பன் தலைமையில் ''பக்தியை மனித குலத்திற்கு வளர்ப்பதில் விஞ்சி நிற்பவர்கள்'' ஆண்களே! பெண்களே! எனும் தலைப்பில் பட்டிமன்றம் நடைபெற்றது. இதில் கோவிலூர் சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் முதல்வர் முனைவர் ரெ.சந்திரமோகன் நடுவராகப் பொறுப்பேற்று நடத்தினார். ''ஆண்களே'' எனும் அணியில் கல்லூரி தமிழ்த்துறை மற்றும் பிற துறைப் பேராசிரியர்கள் முனைவர் வ.மீனாட்சி, முனைவர் மு.பழனியம்மாள், முனைவர் லெ.தீபா, பேரா.ராஜமீனாட்சி ஆகியோரும் ''பெண்களே'' எனும் அணியில் முனைவர் அ.சங்கர்தாஸ், முனைவர் பா.திருக்குமரன், பேரா. திரு வீ.பாஸ்கரன், பேரா திருமதி ரம்யா ஆகியோரும் கலந்து கொண்டு தத்தம் வாதத்தை முன்வைத்தனர்.

இவ்வாறு அருள்மணம் கமழும் விழாவாக சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளின் 13 ஆம் ஆண்டு குருபூசை விழா சிறப்புடன் கோவிலூர் மடாலயத்தின் சார்பில் நடத்தப்பெற்றது.

# காசி அன்னசேத்திர துவக்க பூஜை

காசிவிஸ்வநாதர் கோயில் சார்பில் நாள் ஒன்றுக்கு 5000 பேருக்கு உணவளிக்கும் திட்டத்தை நம் மடத்தின் மூலமாக செயல்படுத்த காசிவிஸ்வநாதர் கோவில் நிர்வாகம் முடிவெடுத்திருந்தது. அதற்கான அன்னசேத்திரத்தில் துவக்க பூஜை, அக்டோபர் 16 அன்று, காசி விஸ்வநாதர் கோவில் தலைமை செயல் அதிகாரி திரு.விஸ்வ பூசன் மிஸ்ரா தலைமையில் நடைபெற்றது.













# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

## பிணிவீட்டுப் படலம் தொடர்ச்சி

பகுதி-12 தொடர்ச்சி



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

'என் உயிர் காத்த ஆஞ்சனேயா' நீ இப்படி அரக்கரிடம் கட்டுப்பட்டாயே! எனத் தவித்துப் புலம்பினாள் சீதாபிராட்டி.

### இராவணன் வீற்றிருந்த காட்சி

பெருமைமிகு அனுமனைக் கட்டிவிட்ட பூரிப்புடன் இந்திரசித்தன் தந்தையின் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான். முத்துச்சரங்கள் தொங்கும் குடை, மூவுலகங்களுக்கும் ஒளி தரும் மற்றொரு சந்திரன் போலத் திகழ்ந்தது. மற்றொரு வெள்ளி மலை (கயிலை) போலவும் தெரிந்தது. வச்சிராயுதம், சக்கரம், சூலம் இவை தாக்கிய வடுக்கள், காதல் பெண்களின் (ஊடல் காலத்திலும், கூடல் காலத்திலும் ஏற்பட்ட) நகக்குறிகள் இவை தசமுகனின் தோள்களில் திகழ்ந்தன. அவனுடைய பார்வை திரும்பும் போதெல்லாம்எட்டுத்திசை யானைகளுக்கும், துருவன், ஆதிசேடன் ஆகிய நாகங்களுக்கும் பயம் ஏற்பட்டது.

இராமனின் தேவி சீதையைக் கண்டது முதல் இதயச்சிறையில் அவளை அடைத்து வைத்த தசகண்டனுக்கு எந்தப் பெண்ணும் பெண்ணாகவே தோன்றவில்லை என்கிறார் கம்பர். வீணை முதலிய இசைக்கருவிகள், பிரம்மதாளம், சில்லரிகுறடு, சேர்ந்து இசைக்க, தேவமகளிரின் அமுதகானம் இருபது செவிகளிலும் தேனாய்ச் சேர்ந்தன. நல்ல இசை ஞானம் உடையவனன்றோ இராவணன். மேனகை எனும் தெய்வலோக அழகி, இராவணனின் அருகில் இருந்தாள்.

## பத்து முகம்

முருகனின் ஆறுமுகமும் என்னென்ன செய்தன என்று திருமுருகாற்றுப்படையில் நக்கீரரும், கந்தர் கலிவெண்பாவில் குமரகுருபரரும், திருப்புகழில் அருணகிரியாரும், திரைப்பாடலில் கவியரசரும் பாடி மகிழ்ந்தனர். கம்பர் தசமுகனின் பத்து முகங்களும் என்ன செய்தன என்று விளக்குகிறார்.

1. ஊடல் கொண்ட மகளிரின் முகத்தில் தோன்றிய இன்பத் தேனை நுகர்ந்தது ஒரு முகம்.
2. கூடிய மகளிரின் மகிழ்ச்சியைக் கண்டுகளித்தது ஒரு முகம்.
3. தன்னிடம் காதல் கொண்டு பாடிய மகளிரின் காதல் அமுதத்தைப் பருகியது மற்றொரு முகம்.
4. ஆடல் மகளிரின் அழகை மாந்தியது வேறொரு முகம்
5. தேவர்களைப் பார்த்தது ஒரு முகம்
6. மந்திராலோசனை செய்தது ஒரு முகம்
7. தீய எண்ணங்களில் ஈடுபட்டது ஒரு முகம்
8. சீதையின் உருவெளித் தோற்றத்தையே கண்டது ஒரு முகம்
9. சீதையின் கற்பு எனும் கடலை நீந்திக் கடப்பது எவ்வாறென யோசித்தது ஒரு முகம்
10. அழகிய மங்கையர் காட்டிய கண்ணாடியில் தனது அழகை ரசித்தது ஒரு முகம்.

அவனது மனம் சீதையை எண்ணிக் கலங்கியவாறிருந்தது.

அரண்மனையில் அவனைக் கண்ட அனுமன், நாகத்தைக் கண்ட கருடனைப் போல் கோபம் கொண்டான். இவனைத் தூங்கும் போது பார்த்தேன். கொல்லாமல் விட்டேன். இவன் தலைகளைச் சிதறடித்து, அன்னை சானகியை மீட்டு அழைத்துச் சென்று ஸ்ரீராமனிடம் சேர்ப்பேன் என எண்ணினான்.

'பாவகாரிதன்முடித் தலை பறித்திலென்என்றால்,
ஏவது யான்இனிமேல் செயும் ஆள்வினை ?'
என்றான் (1101)

இவனை எதிர்த்துப் போரிட்டு மடிந்தாலும் எனக்குப் புகழ் தான்! எனச் சிந்தித்தான். நாகக்கட்டுகளை அறுத்துவிட்டு இவன் மீது பாயலாமா எனவும் எண்ணினான். ஆனாலும்

'என்னையும்வெலற்கு அரிது இவனுக்கு;
ஈண்டு இவன்
தன்னையும்வெலற்கு அரிது எனக்கு;
(1106)

இப்போது போரிட நேரமில்லை. இராமன் தான் இவனை வெல்ல வேண்டும்! வெல்ல முடியும்! அவர் வந்து இவனை வென்று சீதையை அழைத்துச் செல்லலே நல்லது. ஒரு திங்கள் தானே உயிர் காத்திருப்பேன் என்றார் சீதாதேவி. நான் காலம் தாழ்த்தாமல் திரும்பிச் செல்லலே முறை' என்றெல்லாம் சிந்தித்தான்' அனுமன்.

இந்திரசித்தன் அனுமனைத்



அல்லி அம்கமலமே அனைய செங் கண் ஓர்
வி ல் லி த ன் தூ த ன் ய ா ன் ; இலங்கை மேயினேன். (1118)

அந்த வில்லி யார் தெரியுமா? உன் தேகபலம், தவபலம், வரபலம் அனைத்தையும் ஒற்றை அம்பினால் அடியோடு அழிக்க அவதரித்துள்ள வீரன்! வேதமும் அறனும் சொல்லும் தந்தை முன் நிறுத்தி இதோ! இந்தக் குரங்கு! ஆண்மை மிக்க இவன் சிவனைப் போலவும், திருமாலைப் போலவும் வீரம் மிக்கவன்! என்றான். 'யார் நீ? இலங்கைக்கு வரக் காரணம் என்ன? எனக் கோபக்கனல் பொங்க, தேவர் நடுங்கப் பெருங்குரலெடுத்து வினவினான் இலங்கை வேந்தன்! நீ காலனா? முருகனா? ஆதிசேடனா? இந்திரனா? பிரமனா? சிவனா? யார் நீ?" எனச் சரமாரியாக வினவிய தசமுகன் பெருமூச்சு விட்டான்.

## அனுமனின் பதில்

'சொல்லிய அனைவரும் அல்லென்; சொன்ன அப்
புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்;

மெய்அறமூர்த்தி அவன்!'ஆதிமூலமே! என்றழைத்த கஜேந்திரனைக் காக்க வந்த திருமால் தேவர்களைக் காக்க இன்று இராமனாக வந்தான்!

'மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்து ஆய
காலமும், கணக்கும், நீத்த காரணன்கை வில் ஏந்தி,
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட்டு, அயோத்தி வந்தான்; (1124)

பரம்பொருள் அவன் சூலம், சங்குசக்கரம், கமண்டலம் இவற்றை முறையே கொண்ட சிவன், திருமால், பிரமன் மூவரும் ஒன்றானாவன்.

பகவத்கீதையின் 'பரித்ராணாய

சாதூனாம்' என்ற சுலோகத்தின் மொழிபெயர்ப்புப் போலவே

அடுத்த பாடல் உள்ளது.

'அறம் தலைநிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்

திறம் தெரிந்து, உலகம் பூணச் செந் நெறி செலுத்தி, தீயோர்

இறந்து உக நூறி, தக்கோர் இடர் துடைத்து, ஏக, ஈண்டுப்

பிறந்தனன் தன் பொன்பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான். (1125)

'அறம் தலை நிறுத்தி தர்மசம்ஸ்தா பனார்த்தாய

தீயோர் இறந்து உகநூறி விநாசாய சதுஷ்க்ருகாம்

தக்கோர் இடர் துடைத்து பரித்ராணாய சாதூனாம்

ஏக ஈண்டுப் பிறந்தனன் பரமாத்மா.

'அவருக்கே நான் அடிமை! என் பெயர் அனுமன். தலைவனின் தேவியைத் தேடி நாற்புறமும் வந்த வானரங்கள் பல. தென்திசைக்கு வாலிமைந்தன் அங்கதன் என்னை அனுப்பினார். என்றதும் தசமுகன் வாலி சேய்விடுத்த தூதனா! வாலி வலியனோ! அரசு நன்றாக நடக்கிறதா! என்றான்.

## கம்பனின் நகைச்சுவை

வாலி மிகப்பெரிய வீரன். சிவபக்தன். எதிரே நிற்பவர் வரமும், உரமும் பாதி அவனுக்கு வந்துவிடும் வரம் பெற்றவன். பத்துத்தலை இராவணனை வாலில் பற்றி இழுத்துச் சென்றவன். 'வாலி' என்ற பெயரே தசமுகன் மனதில் அச்சம் உண்டாக்கியது போலும். அதனால் தானே வாலியின் பிள்ளை அங்கதனின் தூதன் யான்' என்றான் அனுமன். வாலி நலமா என்றதும் சிரித்துக் கொண்டே 'பயப்படாதே அரக்கனே' வாலி உலகை விட்டு விண்ணுக்குப் போய் விட்டான். அவன் வாலும் போய்விட்டது என்றான் அனுமன்! இராவணனுக்கு நிம்மதி. நமக்குச் சிரிப்பு! அதோடு நிறுத்தவில்லை அனுமன் வாலியை வாளி(அம்பு) ஒன்றால் வானுக்கு அனுப்பிய அஞ்சனமேனியான் இராமன், இப்போது வாலியின் தம்பி சுக்ரீவனே எங்கள் அரசன்! வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு அரசப்பதவியும் தந்து அவனது மனைவியை வாலியிடமிருந்து மீட்டுத் தந்தவன் ஸ்ரீராமன் என்றான். (புரிந்திருக்குமே உன்னை வாலில் கட்டிய வாலியை ஓர் அம்பால் கொல்ல வல்ல இராகவன் உன்னை என்ன செய்வார் தெரியுமா சுக்ரீவனுக்கே மனைவியை மீட்டுத் தந்த அண்ணல் தன் மனைவியை மீட்டுச் செல்ல எவ்வளவு நேரம் ஆகும்!) பேச்சை மாற்ற நினைத்த இராவணன், 'உம் குலத்தலைவனைக் கொன்றவனுக்கு நீங்கள் அடிமையாகப் பணி செய்வது அருமை தான். சுக்ரீவன் என்ன சொல்லி அனுப்பினான்! தூதனாக வந்த நீ ஏன் போரிட்டாய்! (பதில் சொல்வான் அனுமன்)

**(தொடரும்)**

# நகரத்தாரும் திருப்புகழும்

ஒரு இஸ்லாமியருக்கு திருக்குரான் வேதம் என்றால் , ஒரு கிருத்துவ அன்பருக்கு பைபிள் வேதம் என்றால், சைவர்களுக்குத் திருமுறைகள் வேதம் என்றால், வைணவர்களுக்குத் திவ்யப் பிரபந்தம் வேதம் என்றால் , முருக பக்தர்களுக்கு திருப்புகழ்தான் வேதம்.

முதன்முதலில் நக்கீரர் எழுதிய திருமுருகாற்றுப்படை முருகனை நமக்கெல்லாம் ஆற்றுப் படுத்தியது. வடமொழியில் இருந்த கந்தனின் புராணத்தை, கந்தபுராணமாகத் தமிழில் கச்சியப்பர் பதிவு செய்கிறார். அவருக்கு பின்பு வந்த அருணகிரிநாதர் முருகனையே பரம்பொருளாக இறுகப்பற்றி முருக வழிபாட்டை நெறிப்படுத்தினார். அருணகிரிநாதருக்கு பின்பு வந்த அடியார்கள் எல்லோரும் அவருடைய அடிச்சுவட்டைப் பற்றியே முருக வழிபாட்டை அடுத்த நிலைக்குக் கொண்டு சென்றார்கள். அதனால் தான் , முருக பக்தர்களுக்கு திருப்புகழ் வேதமாகின்றது.

## நகரத்தார் வழிபாட்டு முறையில் திருப்புகழின் தாக்கம்

ஆதியில் இருந்தே நகரத்தார்கள் சிவ சமயத்தினர் . அதே வேளையில் , முருக வழிபாட்டில் ஊறித் திளைத்தவர்கள். ஆகவே இயற்கையாகவே திருப்புகழ் பாராயணம் என்பது நகரத்தார்களின்



டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன்,
ஈப்போ, மலேசியா

வாழ்வியலில் ஒன்றாகிவிட்டது .

நகரத்தாரின் பக்தி நெறியும் , அருணகிரிநாதர் காட்டிய சமரச சன்மார்க்க நெறியும் பல இடங்களில் ஒருமித்து இருக்கின்றது.

## சைவ வைணவ ஒருமைப்பாடு

நகரத்தார்கள் சைவர்கள் . ஆனாலும், வைணவத்தையும் போற்றுவார்கள். புரட்டாசி மாதம் வழிபாடும் , இராமாயண ஏடு படித்தலும் அவர்கள் வைணவத்தைப் போற்றும் தன்மையைப் பறைசாற்றுகின்றது. இப்படிப்பட்ட சைவவைணவ ஒருமைப்பாட்டை




அருணகிரிநாதரும் வலியுறுத்துகின்றார் . அவர் கற்பு நெறி தவறாத பக்தி நெறியில் முருகனையே முழுமுதற் கடவுளாக வைத்து திருப்புகழைப் பாடினாலும், மற்ற தெய்வ வழிபாடுகளையும் பல பாடல்களில் போற்றுகின்றார். பல இடங்களில் வைணவத்தைப் பெருமைப் படுத்துகின்றார். முருகனைப் பாடும் பொழுது, ராமன் மருமகன் என்றே பாடுகின்றார். ராம காதையில் கம்பன் கூட ராமனுக்குத் தாலாட்டுப் பாடியதில்லை. ஆனால் அருணகிரிநாதர் அழகாகப் பாடுகின்றார்.

“எந்தை வருக ரகுநா யகவருக
மைந்த வருக மகனே யினிவருக
என்கண் வருக எனதா ருயிர்வருக
...... அபிராம

இங்கு வருக அரசே வருகமுலை
யுண்க வருக மலர்சூ டிடவருக
என்று பரிவி னொடுகோ சலைபுகல
...... வருமாயன்
சிந்தை மகிழு மருகா ...... “

என்று அவர் பாடும் தாலாட்டு நம் மனதையும் கொள்ளை கொள்கின்றது .அவருடன் சேர்ந்து வைணவத்தை நாமும் போற்றுகின்றோம்.

நகரத்தாரின் வழிபாட்டு முறையும் இதுதான். முருகனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டாலும், எல்லாத் தெய்வ வடிவங்களையும் போற்றுவது நகரத்தார் மரபு. இத்துடன் குலதெய்வ வழிபாட்டையும், முன்னோர் வழிபாட்டையும் அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். இது இன்றுவரை தொடர்கின்றது.

## வேதாந்த நெறியும், சித்தாந்த நெறியும்

வேதாந்த நெறியும், சித்தாந்த நெறியும் இந்து மதத்தின் இரண்டு கூறுகள். இவை இரண்டும் ஒன்றோடு ஒன்று இணையாத தண்டவாளங்கள் போன்றது என்றே பலர் கருதினார்கள்.

ஆனால் , அருணகிரிநாதரின் திருப்புகழ் நெறியும் , நகரத்தார் வழிபாட்டு நெறியும் இந்தக் கருத்திலிருந்து கொஞ்சம் மாறுபடுகின்றன.

நகரத்தார்கள் வேதாந்தம் சித்தாந்தம் என்ற வேறுபாட்டைக் காட்டியதில்லை . சைவ சித்தாந்தத்தில் தோய்ந்திருந்த தனவணிகர்கள் , வேதாந்தத்தையும் போற்றினார்கள், வளர்த்தார்கள் . நம்முடைய கோவிலூர் ஆதீனம் ஒரு வேதாந்த மடம் என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

இதைப்போல அருணகிரிநாதரும் சைவ சித்தாந்தியாக இருந்தாலும் , வேதாந்தத்தையும் போற்றினார். முருகனை " சிவ சமயப் பொருளோனே" என்பவர் , அவனே " வேத மந்திர சொரூபன்" என்றும் பாடுகின்றார். வேதாந்தமும் சித்தாந்தமும் இணையும் ஒரு புள்ளியாகவே திருப்புகழ் திகழ்கின்றது.

## தமிழை முதன்மைப்படுத்தும் தன்மை

அடுத்து , தமிழைப் போற்றுவதிலும் திருப்புகழ் காட்டும் வழியில்தான் நகரத்தார் சமூகமும் பயணம் செய்கின்றது.

அருணகிரிநாதர் தான் பாடிய திருப்புகழெல்லாம் தமிழுக்கு மிகச் சிறப்பான ஒரு இடத்தையே கொடுத்துள்ளார். தமிழை 'முந்து தமிழ்' என்றும் , முருகவேள் தந்த தமிழ் என்றும், முருகன் 'தமிழால் வைதாரையும் வாழவைக்கும் வையாபுரியான்' என்றும் , பல இடங்களில் பதிவு செய்துள்ளார்.

அருணகிரிநாதர் தமிழை எந்த அளவுக்கு முன்னிலைப் படுத்தினார் என்பதற்குத் திருப்புகழில் ஒரு செய்தி உண்டு . அருளாளர்கள் பலர் முருகப் பெருமான் , தன் தந்தை சிவபெருமானுக்கு பிரணவ உபதேசம் செய்ததாகக் குறிப்பிடுகின்றார்கள் . ஆனால் யாரும் பிரணவத்தை எந்த மொழியில் முருகன் உபதேசித்தான்? எந்த மொழியில் முருகனும் சிவனும் பேசிக்கொண்டார்கள்? என்று சொன்னதில்லை. அருணகிரிநாதர் மட்டுமே

"சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ரமிரு செவிமீதி லும்பகர் செய் ...... குருநாதா"

என்று சொல்லி , அவர் அந்த உபதேசத்தை தமிழ் மொழியில் செய்ததாகக் குறிப்பிடுகின்றார்.

"கொன்றை சடையற்கு ஒன்றை தெரிய கொஞ்சித் தமிழில் பகர்வோனே" என்று ஈசனுக்கு , சுவாமிநாதன் பிரணவத்தை தமிழில் கொஞ்சிக் கொஞ்சிச் சொன்னதாகக் குறிப்பிடுகின்றார்.

அருணகிரிநாதரின் தமிழைப் போற்றும் இந்தத் தன்மையை நகரத்தாரும் பின்பற்றுகிறார்கள் . சைவத்தையும், தமிழையும் தம் இரு கண்களாக கருதுவது நகரத்தார் சமூகம். பல மிகச்சிறந்த தமிழறிஞர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தில் உருவாகியுள்ளதை உலகம் அறியும் .

இதையெல்லாம் விட திருப்புகழின் அடி நாதமாக இருக்கக்கூடிய முருக பக்தி நகரத்தாரின் மரபணுக்களில் ஒன்று தொட்டு படிந்த ஒரு பண்பு .

இதன் காரணமாகவே திருப்புகழ் வழிபாடு நகரத்தாரிடையே மிக ஆழமாக வேரூன்றியது . சமீபத்தில்



தேவகோட்டையில் இருந்து இரண்டு சிறுவர்கள் ஆளுக்கு 100 திருப்புகழ்கள் இரவும் பகலுமாக மனனம் செய்தார்கள். ஆனால் , போட்டிக்கு முதல் நாள் போட்டிக்கு போதுமான பங்கேற்பாளர்கள் சேராத காரணத்தால் அந்தப்போட்டியை ரத்து செய்து விட்டார்கள் .

கூட தேவகோட்டை கந்த சஷ்டி விழாக் கழகத்தினர் இணையதளத்தின் மூலம் உலகளாவிய நிலையில் திருப்புகழ்

மனனப் போட்டியை நடத்தினார்கள். இத்தகைய போட்டிகள் திருப்புகழை அடுத்த சந்ததிக்கு கொண்டு செல்லும் மிகச்சிறந்த முயற்சி. பல தமிழறிஞர்களையும் , திருப்புகழ் தெரிந்த அடுத்த தலைமுறையையும் இத்தகைய போட்டிகள் உருவாக்கும்.

### சகல செல்வ யோக மிக்க பெருவாழ்வு தரும் திருப்புகழ்

திருப்புகழ் மூலம் வாழ்க்கையில் மிக உயர்ந்த இடத்தை அடைந்தவர்கள் பலருண்டு.

1950 ஆம் ஆண்டுகளில் திருப்புகழ் ஒப்புவித்தல் போட்டி ஒன்றை பெரிய அளவில் நடத்துவதாக தமிழக நாளிதழ்களில் அறிவித்தார்கள் . போட்டியில் வெல்பவர்களுக்குப் பரிசாக பொற்காசுகள் தருவதாகவும் அறி வித்தார்கள் . அந்தப் போட்டிக்காக

போட்டி ரத்து செய்யப்பட்டதால் அந்த இரண்டு சிறுவர்களுக்கும் மிக வருத்தம். பழனி முருகன் சன்னிதியில் இரண்டு சிறுவர்களும் தாங்கள் மனனம் செய்த திருப்புகழை பழனி முருகனிடமே ஒப்புவிக்கின்றார்கள்.



அந்த இரண்டு சிறுவர்கள் வேறு யாருமல்ல . இன்று திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளுக்குப் பிறகு

திருப்புகழையும் , திருமுறைகளையும் , திருவாசகத்தையும் உலகமெல்லாம் சொற்பொழிவாற்றி வரும் பேராசிரியர் பொற்கிழி கவிஞர் சொ. சொ.மீ.சுந்தரம் அவர்களும், பாரதப் பிரதமருக்கு ஆலோசகராக மற்றும் ஐ.ஏ.எஸ் அதிகாரியாக இருந்து பணியாற்றிய அவருடைய சகோதரர் சொ.மீனாட்சிசுந்தரம் அவர்களும் தான். அந்த இரண்டு சகோதரர்கள். திருப்புகழை மனனம் செய்ததற்காக அவர்களுக்கு பொற்காசுகள் பரிசு கிடைக்காவிட்டாலும், அதைவிடப் மிகப்பெரிய பரிசை பழனி ஆண்டவன் அவர்களுக்குத் தந்துள்ளான் என்பது கண்கூடு. இந்தச் செய்தியை பேராசிரியர் சொல்லோவியர் சொ.சொ.மீ.சுந்தரம் அவர்களே பல மேடைகளில் சொல்லியுள்ளார்கள் .

முருகப்பெருமான் ஆசை ஆசையாய் தன் அடியார் அருணகிரிநாதரிடம் கேட்டுப் பெற்ற தமிழ் பாடல் திருப்புகழ். முருகனிடம் பேச வேண்டுமா? திருப்புகழ் பாடுங்கள். அதுதான் முருகனிடம் நான் பேசும் பேச்சு. திருப்புகழைப் படிக்கக்கூடிய அடியவர் இச்சையில் எவை எவை உற்றனவோ அவை தருவித்தருளும் பெருமான் என்று முருகனைப் போற்றுவார் அருணகிரிநாதர்.

திருப்புகழை முதன்முதலில் பஜனை முறையில் பாடியவர் ஒரு நகரத்தார். சங்கீத பூஷணம் ராமநாதன் செட்டியார் என்பது அவர் பெயர். மிகச் சிறப்பாகத் திருப்புகழை பஜனை மெட்டில் பாடக் கூடியவர். ஆனால் பெரும்பாலோர்




அவரை அறிந்திருக்கவில்லை. அவரை ஆதரித்து இசை விழாக்களில் வாய்ப்பு கொடுக்கவும் இல்லை. அவரிடமிருந்து திருப்புகழை எல்லோரும் பாடக்கூடிய அளவில் பஜனை முறையில் கற்றுக் கொண்டவர் திருவொற்றியூர் இன்ஜினியர் காரைக்குடி அ. சுப்பிரமணியன் அவர்கள். இன்றைக்கு அவர்கள் குடும்பம் உலகமெல்லாம் பரவி திருப்புகழை எளிய முறையில் எல்லோரும் தாளத்தோடு, ஒரு நாட்டுப்புற மெட்டில் இறைவனைப் பாடி மகிழ வழி செய்துள்ளது. அவருடைய புதல்வர் துபாய் ஆடிட்டர் சுப. மெய்யப்பன் குடும்பத்தாரும், திருமுருகன் திருப்புகழ் பாராயண குழு என்ற பெயரில் உலகில் பல்வேறு இடங்களில் திருப்புகழை இணையம்



மூலமாக சொல்லித் தருகின்றார்கள். இது பாராட்டுதலுக்குரியது. தான் மட்டும் திருப்புகழைப் படிக்காமல், தன்னுடைய பிள்ளைகளும் மற்ற குடும்பத்தினரும் இதில் ஈடுபட்டு, இதை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்வதற்கு இவர்கள் செய்யும் முயற்சி காலத்தால் நிலைத்து நிற்கும். வள்ளிமலை சுவாமிகள், குருஜி ராகவன் போன்றோர் திருப்புகழை பாரம்பரிய முறைப்படி ராகத்தோடு கற்றுக் கொடுத்தார்கள். ஆனால், இது பரவலாக எல்லோரையும் சென்று சேரவில்லை . சங்கீதம் அறிந்தவர்கள் மட்டுமே பாடக்கூடிய ஒன்றாக இருந்து. ஆனால், இன்றைக்கு எளிய மெட்டில் திருப்புகழை பெரும்பாலோர் பாடத் துவங்கி உள்ளார்கள் என்றால் அதற்கு ஒரு முக்கிய காரணம் இன்ஜினியர் காரைக்குடி அ.சுப்பிரமணியன் குடும்பத்தினர்.

இன்றைக்குப் பல இடங்களில், பல விசேஷங்களில் திருப்புகழ் முற்றோதல் பாடுகின்றார்கள். அருணகிரிநாதர் விழாக்கள் பல இடங்களில் சிறப்பாக நடைபெறுகின்றன. மலேசியாவில் பல நகரங்களில் வருடந்தோறும் டிசம்பர் 25 முதல் ஜனவரி ஐந்தாம் தேதி வரை மிக விமரிசையாகப் அருணகிரிநாதர் விழா நடைபெறுகின்றது. அருணகிரிநாதர் மணிமண்டபம் அவர் அவதரித்த திருவண்ணாமலையில் கட்டப்பெற்று சிறப்பாக குடமுழுக்கும் சென்ற ஆண்டு கண்டது. சமீப காலங்களாக, வேல் வகுப்பு வேல்மாறல் பாராயணம் மிகப்பரவலாக ஆலயங்களிலும், இல்லங்களிலும் நடந்து வருகின்றது. இவையெல்லாம் முருக பக்தியின் எழுச்சியைக் காட்டுகின்றது. திருப்புகழின் மறுமலர்ச்சியைக் காட்டுகின்றது . அருணகிரிநாதர் காட்டிய வழியில் முருக பக்தி உலகெங்கும் ஓங்கி வளர்கின்றது .

திருப்புகழ் காட்டக்கூடிய தமிழை முதன்மைப்படுத்திய சமரச சன்மார்க்க பக்தி நெறியையே , நகரத்தார் பெருமக்களும் தம்முடைய வழிபாட்டு நெறியாகக் கொண்டிருக்கின்றனர் என்பது நிதர்சனமான ஒன்று.

## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 8

## அப்பர் சமயப் பற்றுடன் ஒரு பகுத்தறிவாளர்!



**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

இறை நம்பிக்கையுடைய எவரும் எய்தக் கருதுவது இறையருள் என்றாலும், இறையருளால் பெறவிரும்புபவற்றின் பட்டியலுக்கே முன்னுரிமை என்பதை மறுக்கவியலாது. இறைவன்மேல் தீரா அன்பும், அவனன்றி வேறு சிந்தனையில்லா வாழ்வும், அவனருளால் அவனையுணரும் வேட்கையும், அவ்வுணர்வால் தம்முள் இறைவனைக் காணும் தெளிவும் அடியவர்களின் மேன்மை சொல்லும் பத்திமை நெறி.

அவ்வகையில், இறைவனைப் பலகுலத்து மக்களிடமிருந்து விலக்கிநிறுத்தி வணங்கும் வேத வேள்வியாளரின் பக்திநெறியினின்று வேறுபட்டுத் தெரிகிறது சிந்தையில் சிவனை நிறுத்திய நாயன்மார் பத்திமைநெறி. இறைப்பற்றோடு சமூகப் பற்றாளர்களாகவும் நாயன்மார் வாழ்ந்ததால்தான், அவர்கள் படைத்த இலக்கியங்கள் இன்றைய சமூகத்தோடும் பொருந்தி நோக்கத் தக்கவையாக ஒளிர்கின்றன.

அவர்களுள்ளும், சைவத்தைத் தமிழ்மண்ணில் புதியதோர் நெறியாக அல்லாது, தமிழ்ப் பண்பாட்டின் வேர்களோடு பிணைந்த வாழ்வியல்




விளித்து அன்பே சைவத்தின் சாரம் என்று புலப்படுத்தியவர் அப்பர். துன்பிலாத் தொண்டர் கூடித் தொழுதழுது ஆடிப்பாடும் அன்பைத் தவிர வேறொன்றைப் பொருளாக இறைவன் கொள்வதில்லை என்று திருவையாற்றில் அன்பே சிவமென்று வலியுறுத்துகிறார். ஆரூர் அறநெறியில், வீரமும், தாரமும், அரவின் ஆரமும் பூண்ட பெருமான், தமக்கன்பு பட்டவர் பாரத்தையும் தாமே ஏற்றுக் கொள்பவர் என்றுரைக்கிறார்.

அன்பனாகவும் பண்பினனாகவும் பாட்டுடைத் தலைவன் ஒருவனிருக்க, அவனைப் பாடும் போக்கில் சமூகத்தைப் படம்பிடித்துக் காட்டும் சங்ககாலத் தமிழ்ப் படைப்பாளர்களின் மரபை அப்பரும் கைக்கொண்டது அவருடைய இலக்கியப் பயிற்சி எனலாம். ஆயினும், சிவனே முதற்பொருளான பத்திமை இலக்கியத்தில், அன்பே சிவமான இறையன்பில் தோய்ந்த உணர்வலைகளையும் மீறி, மக்கள் அவர்தம் வாழ்வு பண்புநலன் சமூக நெறிகள் பிற்போக்குக் கட்டுப்பாடுகளைக் கருப்பொருளாக வைத்து அப்பர் பாடுவது சிந்தித்தற்குரியது. அடியார்களில் முன்னவராகவோ மூத்தவராகவோ தம்மையெண்ணாது, மக்கள் சமூகத்தில் ஒருவராக அவர்களுக்கிடையில் நின்று அமர்ந்து அளவளாவி கூர்ந்து நோக்கி அவர்களுக்காகச் சிந்தித்ததன் பயனால் உயர்ந்தவர் அப்பர் எனும் பகுத்தறிவாளர்.

எப்பொருள் யார்யார் வாய்கேட்பினும் எத்தன்மைத்தாயினும், மெய்பொருள் காண்பதே அறிவு என்ற வள்ளுவரின் வாக்கைப் பின்பற்றிய நாவுக்கரசரின் நெறியாகவும் பொருந்தச் செய்ததில் அப்பர் தனித்து நிற்கிறார். இறைவனைத் தலைவனாகவும் தம்மை அடிமையாகவும் நினைந்து நெக்குருகிய நாவுக்கரசர், மக்களில் ஒருவராகத் தம்மை நடத்திக் கொண்டது அவருடைய நற்பண்பால் மட்டுமல்ல, சமூகப் பற்றாலும்தான்.

இறைவனையும் அன்பு செய்யுமடியாரையும் அன்பரென்ற ஒற்றைச் சொல்லால்

தேர்ந்த சிந்தனையால், சமூகப் பற்றாளராக மட்டுமல்லாமல் சிலவேளைகளில் சமூகப் போராளியாகவும் அவர் மிளிர்கிறார். அதன் தொடர்ச்சியாகவே, அன்பு மட்டுமல்லாது அறமும் அறிவும், நெறியும் நீதியும், கல்வியும் தகவும் தழைத்தோங்கும் சமூகத்தை உருவாக்க முயன்ற சமூக ஆர்வலராகச் சிரிக்கிறார் அப்பர்.

அவர் காலத்தே மக்களிடையில் வழக்கிலிருந்த பிரிவினைகள், பாகுபாடுகள், சமயத்தின் பெயரால் திணிக்கப்பட்ட கட்டுப்பாடுகள், தேவையற்ற சடங்குகளைக் கடுமையாகச் சாடிய மறுமலர்ச்சியாளராகப் பாடல்கள் அவரைக் காட்டுகின்றன. இறைவனின் பெயரால் உருவான சாத்திரங்களும் கோட்பாடுகளும் மனிதத்தை வீழ்த்துமெனில், அவற்றைக் களையெடுத்திட ஒலித்த முதல் பத்திமைக் குரல் அப்பருடையதுதான். இன்று இருபத்தோராம் நூற்றாண்டுப் பகுத்தறிவுவாதிகள் எதிர்ப்பவற்றைத் திருநீறணிந்தபடிச் சாடிச் சினந்த உள்ளம் அவர் உள்ளம்.

### நெறியுடன் வாழ்வதே சைவம்

சைவ நெறி என்று பத்திமையுலகம் பற்றியதையும் போற்றியதையும் மாற்றி, நெறியுடன் வாழ்வதே சைவம் என்ற நிலைக்கு இறைவன் வாழும் இதயத்தை மேன்மைப்படுத்திய பெருமையும் அப்பரையே சாரும். அந்நெறியே, தீவினை நாடாது அனைவரையும் சமமாகக் கருதத் தூண்டி, சமூகத்தை நல்வழியில் செலுத்திய நெறி.

அன்பே சிவமென்ற திருமூலர் திருமந்திரத்தை அறமே சிவமென்று மாற்றியமைத்தவர் நாவுக்கரசர். முற்போக்குப் பாதையில் மக்கள் பயணிப்பதைப் பெருவேட்கையாகக் கொண்ட அவர், அறமென்ற ஒற்றைக் குடையின்கீழ் எண்ணிலடங்கா வாழ்வியல் அறிவுரைகளை வழங்குகிறார். வயதில் மூத்தவராகவோ நல்லாசிரியராகவோ அப்பர் அறவுரைகளை வழங்கியிருப்பின், கேட்டும் படித்தும் மக்கள் நகர்ந்திருப்பர். கல்லடிப்பட்ட மரமாக, சொல்லடி தாங்கிய சான்றோராக, இறைவனையுணர்ந்த அடியாராக, பிறருக்கு உரைத்தவற்றைத் தாமே பழகிய பண்பாளராக, பெருமையின் பெருக்கத்தில் பணிவும் சோதனைகள் தாக்கியபோது உயர்வும் காட்டிய சீராளராக அவர் மக்களிடையே தோளணைத்து உரையாடியதால், நாவுக்கரசரின் சமூக விழிப்புணர்வுக் கருத்துக்களை மக்கள் மனமொன்றிக் கேட்டனர்.

அப்பர் சுட்டி வலியுறுத்திய அறங்களைப் பல்வேறு பகுதிகளாகப் பிரித்துப் பார்த்தால்தான் முழுமையாகச் சுவைக்கமுடியும். எனவே, அவர் பாடல்கள் காட்டும் நன்னெறிகள் மட்டும் இந்தப் பகுதியில் நோக்கப்படுகின்றன.

### நன்னெறியே நமச்சிவாயம்

நாநவின்றேத்தும் ‘நமச்சிவாயம்’ ஞானமும் கல்வியும் தாமறிந்த வித்தையும் என்றாலும், இறைவனின் ஐந்தெழுத்து அருளுவதில் அப்பர் முன்னிலைப்படுத்துவது நன்னெறியையே ‘நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே’ என்கிறார். நன்னெறி காட்டலை வீடுபேறு

அருளல் என்றும் கொள்ளலாம். ஆனால், அவர்தம் பாடல்களை ஆழ்ந்து நோக்க, நன்னெறிகளென்று பெரிய பட்டியலையே அவர் வழங்கியிருப்பது புலப்படும்.

'சொல்லார்ந்த சோற்றுத்துறையான் தொல்நரகம் நன்னெறியால் தூர்ப்பான்' என்று, நரகத்தின் தீயதன்மையைத் தூய்மையாக்க இறைவனே நாடுவது நன்னெறியென்பதை போதிக்கிறார். தில்லை யிலோ, "நெஞ்சத் தூய்மையுடன் உம்மை நினைக்கச் செய்யாது வஞ்சிக்கிறீரே," என்று சிவனாரைக் குற்றம் சாட்டுகிறார் (நெஞ்சினைத் தூய்மை செய்து நினைக்குமா நினைப்பியாதே வஞ்சமே செய்தியாலோ..).

"நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்," என்று கேட்பவர், அதே பதிகத்தில் (05.090) நாணம் தவிர்க்க என்ன செய்யவேண்டுமென்று விடையுமளிக்கிறார்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே

புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்

பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு

நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே.

(05.090.09)

நெகிழ்ந்து நினைபவர் நெஞ்சுளே புகுந்து நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன், பூவும் நீரும் கொண்டு வழிபடும் பொய்ம்மையாளர் நாணுமாறு சிரித்து நிற்பாராம். தவறிழைத்து நாணமின்றி வாழ பொய்ம்மையைத் தவிர்க்கச் சொன்னார்.

## பொய்மை விடுத்து மெய்யைப் பற்றுதல்

பொய்ம்மை விடுத்து, மெய்யைப் பற்றுமாறு பல்வேறிடங்களில் உணர்த்துகிறார் நாவுக்கரசர். திருநல்லத்தில், 'பொக்கம் பேசிப் பொழுது கழியாதே', என்று அதே கருத்தை விதைக்கிறார். ஆவடுதுறை அரனை 'மெய்யானைப் பொய்யரொடு விரவா தானை,' என்று கூறி, பொய்யரைத் தவிர்க்கும் பணியை இறைவனுக்களிக்கிறார். திருநாகேச்சரத்தில் மேலும் தெளிவுபடுத்துகிறார் தம்மை விரும்புவார்க்கு மெய்யானாகவும் விரும்பாதவர்க்குப் பொய்யானாகவும் விளங்குபவராம் இறைவன் (மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு; விரும்பாதவரும் பாவியவர்கட்கென்றும் பொய்யானை). வன்னியூர் ஈசன், 'மெய்ம்மையால் நினைவார்கள்தம் வல்வினை தீர்ப்பர்' என்று உறுதியளிக்கிறார்.

மெய்ம்மையா முழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்

பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப் பாய்ச்சித்

தம்மையு நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்

செம்மையு ணிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே

(04.076.02)

எனும் பாடலில், பொதுவாகக் குறிக்கப்படும் சமயத் தேவைகளைவிடுத்து சிவகதிக்கான வழிகளாக நற்பண்புகளையே

விரிவுபடுத்துகிறார் வாகீசர். நற்பண்புகள் பெருக்கிக் குறைகள் களைந்த செம்மை வாழ்வை இதைவிட எங்ஙனம் தெளிவுபடுத்துவது?

ஓர் ஏழாம் நூற்றாண்டு சமயப்பற்றாளரின் வாக்கிலிருந்து வரும் சமூக மேம்பாட்டு அறைக்கூவல்கள் இவை. அப்பர், பத்திமைக்காலத் தமிழகத்திற்குக் கிடைத்த முற்போக்குச் சிந்தனையாளர் என்பதில் ஐயமுண்டோ?

இவை, நன்னெறிக் கடலின் சிறுதுளிகளே. பொருந்தாப் பண்புகள் வேறு என்னென்ன?

### கள்ளம் ஒழித்தல்

திருச்செம்பொன்பள்ளியில், உலகியல் வாழ்வே நன்றென்று கள்ளத்தை ஒழிக்காமல் வாழும் மக்களுக்கு மேம்பட்ட அறிவுரையொன்றை நல்குகிறார். செற்றமும் குரோதமும் நீக்கினால், இறைவன் ஒழுக்கமும் நோன்புமாக உடனிருப்பார் என்கிறார்.

ஞாலமு மறிய வேண்டில் நன்றென வாழ லுற்றீர்

காலமுங் கழிய லான கள்ளத்தை யொழிய கில்லீர்

கோலமும் வேண்டா வார்வச் செற்றங்கள் குரோத நீக்கில்

சீலமுந் நோன்பு மாவார் திருச்செம்பொன் பள்ளி யாரே

(04.029.06)

### பயனற்ற செயல்கள் தவிர்த்தல்

குடமூக்கிலோ, பயனற்ற செயல்களைச் செய்து வாழ்நாளைக் கழிக்காமலும் (பூத்தாடிக் கழியாதேநீர் பூமியீர்), மனம்விரும்பிய செயல்களையே செய்து காலத்தைக் கழிக்காமலும் (காமியஞ் செய்து காலங் கழியாதே), தீயிலாடும் சிவனாரின் திறத்தைச் சிந்தையுள் வைக்கப் பணிக்கிறார். தீதவை செய்து தீவினை வீழாதே என்றும் குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர் என்றும் அறிவுறுத்துகிறார் அப்பர்.

### மனத்துக்கண் மாசிலன் ஆதல்

மனத்துக்கண் மாசிலனாதலே அறம் என்ற வள்ளுவர் வாக்கின்வழி, இறைவன் தமது ஞானவெப்பத்தினால் மனத்தின் மாசுகளைக் களைபவர் (வெப்பத் தின்மன மாசு விளக்கியவர்) என்று பொதுப் பதிகமொன்றில் (05.096) கூறுகிறார். கீழ்வேளூரில், 'உள்புக்கென் மனத்து மாசு கிளைவானைக் கீழ்வேளூ ராளுங் கோ' என்று உருகுகிறார்.

தனத்தினைத் தவிர்ந்து நின்று தம்மடி பரவு வார்க்கு

மனத்தினுண் மாசு தீர்ப்பார் மாமறைக் காட னாரே

(04.033.08)

மறைக்காட்டு மணாளரோ, செல்வங்களைத் தவிர்த்து அடிபரவும் பத்தர்களின் மனத்தின் மாசு தீர்ப்பவராம்.

### தூயநெறி

ஆதியு மறிவு மாகி யறிவினுட் செறிவு மாகிச்

சோதியுட் சுடரு மாகித் தூநெறிக் கொருவ னாகி

(04.048.02)

நன்னெறியுடன் தீயபண்புகளைக் களைந்து மனத்துக்கண் மாசிலனாதல் உலகத்தோர் கடைப்பிடிக்க வேண்டிய வாழ்வுநெறியென்று பலவாறாகச் சொன்னார் அப்பர். அடுத்து, இறைவனே தூய நெறியானவன் என்று சமூகம் சிறக்கும் வழியை இறைவன்மேலும் ஏத்தி வலியுறுத்தும் ஆசானாகிறார்.

சிரமஞ் சேரழல் தீவினை யாளரேஞ் என்று கடின வாழ்வில் அழல்வோருக்கு நற்செய்தி வழங்குகிறார் தானே நல்வழியானவன், தவமானவன், அத்தவத்தால் வரும் செயலும் அவனே; அவனைச் சேர தொல்லைகள் தீருமாம். மக்கள் நல்வழிகளையும் நற்பண்புகளையும் வளர்க்கும் திறத்தவராக வாழ்தலின் தேவையைத் தம் பாடல்கள்மூலம் விடாமல் ஒலிக்கச் செய்தவர் அப்பர்.

தருமந் தான்தவந் தான்தவத் தால்வரும்

கருமந் தான்கரு மான்மறிக் கையினான்

அருமந் தன்ன அதிர்கழல் சேர்மினோ

சிரமஞ் சேரழல் தீவினை யாளரே.

(05.097.21)

### குற்றமற்றோர் ஆதல்

மக்கள் கூட்டத்தை அழைக்கும் நாவுக்கரசர், சிலபோது அன்பாகவும் அமைதியாகவும் சிலபோது பொறுமை யிழந்து சினமுற்றும் வருத்தம் நிறைந்தும், சைவத்தைப் பற்றுமாறு எடுத்துரைக்கிறார். பலப்பல உணர்வுகளால் ஆட்கொள்ளப்பட்டாலும், குற்றமற்றவர் வாழும் சமூகத்தையே குடிகள் மனங்களில் பதியச் செய்கிறார்.

மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்

கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே

புனிதன் பொற்கழல் ஈசனெ னுங்கனி

இனிது சாலவு மேசற்ற வர்கட்கே .

(05.091.07)

நாவுக்கரசரின் நல்லுரைகள், அன்பாக அழைத்து ‘இங்கே வாருங்கள்.. ஒன்று சொல்கிறேன்,’ என்று கனிவுடன் திண்ணையில் அமர்ந்து பேசுவதுபோலவே படிப்போருக்குத் தோன்றும். பொற்கழல்கள் அணிந்த புனிதனான ஈசனெனும் கனி, குற்றமற்றவர்களுக்கு மிகவும் இனியது எனும் இப்பாடலில், இறைவன்மீது பேரன்பையும் மக்கள்மீதான பொறுப்புணர்வையும் வெளிப்படுத்துகிறார்.

சிவனைச் சேருங்கள்! சிவனை வழிபடுங்கள்! சிவனுக்காய்த் தொண்டாற்றுங்கள்! சிவனடியாரைச் சிவனென்று போற்றிப் பணிசெய்யுங்கள்! என்றெல்லாம் சொன்ன அப்பர், அவரவர் நற்பண்புகளைப் பேணுவதும் நல்ல நெறிகளுடன் வாழ்வதும் இறைவழிபாட்டின் இன்றியமையாத் தகுதிகள் என்று ஆணித்தரமாக உரைக்கிறார். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வழிகளையும் தாண்டி, அடிப்படை நற்பண்பை வலியுறுத்திய பத்திமைக்காலச் சமூகச் சீர்திருத்தவாதி அவர் என்பதற்கு அவர்தம் பாடல்களே சான்று.

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.

# ஆதி சங்கரரின் சுப்ரமணிய புஜங்கம்

## தமிழ் மொழியாக்கம் (பகுதி 2)

முனைவர் **ரெ.சந்திரமோகன்,**
**முதல்வர்,**
**முனைவர் வ.மீனாட்சி, தமிழ்த்துறைப் பேராசிரியர், நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி**

இந்து மதத்தின் ஆறு வகை சமயங்களையும் ஒருங்கிணைக்க அரும்பாடுபட்டவர் ஆதிசங்கரர். ஆதிசங்கரர் சைவமா? வைணவமா? என்று அவரையே பாதியாக்கிப் பார்த்தனர் நம் மக்கள். 'அத்துவிதம்' என்ற சித்தாந்தத்தை முன்னறுத்தி பாரதம் முழுதும் பயணித்த ஆதிசங்கரர் கணக்கற்ற நூல்களுக்கு விரிவுரையெழுதி உள்ளார். பண்டிதரும் பாமரரும் அவரவரது பக்குவத்திற்கு இணங்க புரிந்து மேன்மையுறும் வழியைக் கண்டவர் ஆதிசங்கரர். அவரது எண்ணற்ற பாஷ்யங்கள் சுமார் ஆயிரம் ஆண்டுகளாக அறுவகை சமயத்தினரையும் ஒருங்கிணைகிறது என்றால் மிகையாகாது. கனகதாரா ஸ்தோத்ரம், பஜகோவிந்தம் போன்றவை மிகப் பிரபலமானவை. அவரது சுப்பிரமணிய புஜங்கப் பாடல்கள் மிகச் சிறப்புப் பெற்றவை. பாம்பு வளைந்து வளைந்து செல்லும் வடிவில் அமைக்கப்பட்டிருக்கும். இந்நூல் திருச்செந்தூர் முருகன் மீது வடமொழியில் பாடப்பெற்றது. இது மிக எளிமையான நிலையில் அரிதான பொருள்கள் அமைந்ததாகும்.

இதனைப் பாராயணம் செய்தால் நல்ல மனைவி, பிள்ளைகள், நீண்ட ஆயுள் முதலியவை கிடைக்கும். இதுவே நம்மை முருகப்பெருமான் திருவடியில் சேர்க்கும். இதில் முருகனின் அடி முதல் முடி வரை வருணனை இடம் பெற்றுள்ளது. மேலும் சுப்பிரமணிய உபாசனை, நோய் நீக்கும் மந்திரம், ஆறெழுத்து மந்திரத்தின் பெருமை, விபூதி விழுச்செல்வச் சிறப்பு, சக்திவேலின் சிறப்பு என்று பல செய்திகள் இடம்பெற்றுள்ளன. வடமொழியில் உள்ள 33 சுலோகங்கள் தமிழில் மொழியாக்கம் செய்து இங்குப் பகுதி பகுதியாக வழங்கப்படுகின்றன.

### சுப்ரமணிய புஜங்கம்

#### 12. கரங்களின் வர்ணனை

உந்தன் கரங்கள் பனிரெண்டும் என்றும் எமக்கு அருளிடவே

கந்தன் கரங்கள் பயம்நீக்கும் பக்தரை என்றும் காத்திடுமே

ஆனால் அயனொடு தேவர்க்கோ அவைகள் தருவது அச்சமப்பா!

அபயம் கொண்டு அசுரருமே அஞ்சி நடுங்கி உய்வாரே!

## 13. உவமையில்லை உன் முக அழகு

செந்தூரமிட்ட உன் முகமோ மருவுள்ள நிலவினை நினைவூட்டும்

செந்தூரமில்லா நேரங்களில் கரை யில்லாத முழுநிலவோ!

ஆறுமுகங்கள் எந்நாளும் அழகாய் திகழும் என்நினைவில்

ஆறுதல் நல்கும்; நிலவொளியை உன் திருமுகஒளி என்றும் மிஞ்சிடுதே!

## 14. முக அழகு

ஆறு தாமரை மலர்கள்போல் சிவந்தன உந்தன் ஆறுமுகமே

ஆறுதல் தரும் உன்புன்னகை அடுக்கிய முத்தின் ஆரமோ!

கூடிய அன்னப் பறவைதனைக் காட்சியாய் கண்டேன் உன்முறுவல்தனில்

தேனோ இதழில் ஊறிடுதே கருவண்டாய் கடைக்கண் திகழுதய்யா!

## 15. கண்களின் அருட்பார்வை

காதளவோடிய உன்கண்கள் பனிரெண்டு உடைய உமைபாலகனே

ஆதரவாய் வந்த அறுமுகனே என்றே அழைப்போம் அன்போடு

கடைக்கண் கொண்டுநீ அருளிவிட்டால் நிறைஆயுள் நீள்புகழ் கிடைத்திடுமாம்

தடைகள் தகர்க்கும் என்பார்கள், அதுவே எனக்குப் போதும் அய்யா!

## 16. பெரிய வாசகங்களும் ஆறுமுகங்களும்

ஐந்தெழுத்து மந்திரத்தை உயிர்க்கே தந்தான் உன்தந்தை

ஐந்தெழுத்து போதாதென தந்தான் மகனுக்கு மகுடங்களை!

ஆறுதலைத்தரும் உன் அறுதலைகள் மகுடம் தாங்கி மிளிருதய்யா!

ஆறெழுத்து மந்திரமே அடியேன் மனதில் நின்றதய்யா!

## 17. முருகனின் அணிகலன்

பரமசிவனின் பாலகனே! உன் தோள்கள் தங்கும் தோள்வளையே!

பட்டொளி வீசும் மார்பினிலே மணிஆரம் அழகாய் ஆடிடுமே!

காதில் அசைந்திடும் குண்டலங்கள் உன் முகவொளி கூட்டிக் காட்டுதய்யா!

தீதில் கைகளில் வேலுடனே வருவாய் பார்வதி பாலகனே!

## 18. ஆறெழுத்து மந்திரமகிமை

ஆறெழுத்து மந்திரம் சரவணபவ எனும் மந்திரம்

யாரெடுத்து ஓதினாலும் நன்மை அளிக்கும் மந்திரம்

அம்மை ஒத அவர்மடியில் தந்தை ஒத அவர்மடியில்

எம்மைக் காக்க நான் கொஞ்ச எனையும் பார்க்க வருவாயே!

### 19. புலடைக்கும் ஆற்றல்

குமரேச குகனே கந்தசாமியே! குலம்தனைக் காக்கும் தேவதேவே!

அமரரைக் காக்கும் அதிதீரனே! வேலாயுதனே உமைமைந்தா!

புலன்கள் கூடி ஆட்டிடுதே! குமரா நீயே வந்திடப்பா

புலிந்தன் குலவள்ளி சூடிநின்று ஓட்டிடு எந்தன் வலிதனையே!

### 20. அனாதைகளைக் காப்பவன்

எந்தன் உடலும் நடுங்கியதே ஒடுங்கியதே புலன்கள் ஐந்தும் தளர்ந்தனவே

பந்தம் பாசம் தேடிய கால்கைகள் ஓயந்தனவே

வாதம் பித்தம் சிலேத்துமம் வகை தெரியாமல் போனதே

நாதா சரவணபவ என நான்நினைத்தால் சடுதியில் வருவாயே!

### 21. எமபயம் நீங்க

மரணம் எதிர்கொள்ளும் வேளையிலே பயம்தரும் எமனின் தூதர்களை

கரணம் போட வதைப்பதற்கு வேலனே உன்னை நினைப்பேனே!

திருச்செந்தூர் திருத்தலமே போற்றி போற்றி செந்திலாண்டவனே!

கையில் அபயம் தந்தபடி எமபயம் நீக்க வரவேண்டும்!

### 22. முருக உபாசனை

குமரா உந்தன் திருப்பாதம் அனுதினம் பலமுறை வணங்கிடுவேன்

அமரர் ஊர்தியில் நான் ஏகுமுன்னே! நானும் இன்றே பாடுகிறேன்

மரணத்துயரம் அணுகையிலே வாயும் மனமும் தடுமாறுதய்யா!

கரணங்கள் ஒடுங்கிய காலத்திலே கருணா மூர்த்தி வந்தருள்வாயே!

### 23. மனச் சஞ்சலம் நீக்கும் மருந்து

அன்று இந்த அண்டத்தை ஆயிரம் கூறாய் ஆக்கியவன்

தின்று கொழுத்த சூரன் தமருடனே அண்டம் அதிர வதம் செய்தாய்

இன்று எந்தன் நெஞ்சத்தை கூறிடும் ஆசைகள் ஆயிரத்தை

ஒன்றும் செய்யாமல் நிற்பதுவே உனக்கே அழகா ஆண்டவனே!

### 24. மன நோய் நீக்கும் மந்திரம்

மனத்தின் கவலை முற்றியதே தனத்தின் காமம் வற்றியதே

குணத்தின் குன்றே குமரேசா இக்கணத்தே இந்நிலை மாற்றிடுவாய்

பாவத்தைக் களையும் வழி யொன்றே! அதை அறிந்தே உனைநான் போற்றுகிறேன்!

பார்வதி மைந்தா செந்திலாண்டவா மனக்கவலையை உடனே ஓட்டிடுவாய்!

## ஐந்தொகை காட்டும் பகுதி–3

# தமிழர் சமயமும் கட்டடக் கலையும்



**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

நடுகல் வழிபாட்டைப் போற்றும் தொகைநூல்கள் பல அரிய தகவல்களைத் தருகின்றன. நட்ட கல் என்பதால் நடுகல் எனப் பெயர் பெற்ற இக்கற்கள் அனைத்தும் பாலைநிலத்துச் சுரவழிகளிலேயே அமைந்திருந்தன. பெரும்பாலும் போரில் வீரம் காட்டி இறந்தவர்களுக்காகவே அவை நடப்பட்டிருந்தன. மழவரும் மறவருமான ஆறலைப்போர் வீழ்த்திய வழிப்போக்கர் கற்பதுக்கைகளின் மீதும் நடுகற்கள் நடப்பட்டிருந்தன. அவையனைத்தும் சுரவழி வருவோர் வணங்கி வழிபடும் வகையில் நிழலில் இருந்தன. அவற்றுக்கு முன்னால் வேலூன்றிக் கிடுகு என்றழைக்கப்பட்ட கேடயத்தைச் சாத்தியிருந்தனர்.

வீரம்காட்டி இறந்தவர் நடுகற்களில் அவர்தம் பெயரும் பெருமைகளும் பொறிக்கப்பட்டிருந்தன. அப்பொறிப்புகள் பழந்தமிழ் எழுத்துக்களில் விளங்கியமை அண்மையில் கண்டறியப்பட்ட புலிமான்கோம்பை, தாதப்பட்டி நடுகற்களால் உறுதிப்படுகின்றன. இவ்வெழுத்துப் பொறிப்புகளைச் சுரநெறி செல்வோர் படித்து வீரர் பெருமை போற்றி வழிபட்டனர். உப்பு வணிகர்களின் வண்டி உருளைகளில் இருந்த பூண்கள் இடித்து மோதியதாலும் மறவர்களும் மழவர்களும் தங்கள் அம்புகளை இக்கற்களில் தேய்த்துக் கூர்தீட்டிக் கொண்டதாலும் சில நடுகற்களில் செதுக்கப்பட்டிருந்த எழுத்துக்கள் சிதைந்திருந்தன. ‘கூர்உளிக் குயின்ற கோடுமாய் எழுத்து’ என்னும் அகநானூற்று அடி இதைக் காட்டும். எழுத்துச் சிதைவால்,



மயங்கி வேறு பொருள் கொண்டதாக இளநாகனார் குறிப்பிடுகிறார். இன்றைக்கும் இது போன்ற சிதைந்த கல்வெட்டெழுத்துக்களைப் படிக்க முனையும் கல்வெட்டறிஞர்கள் எழுத்து மாற்றங்களில் கருத்து வேறுபாடுகள் கொள்வது நாளும் காண்பதே.

இந்நடுகற்கள் ஆள் நிற்குமாறு போல நெடுநிலை நடுகற்களாய் நின்றன. சுரவழிச் சென்ற யானையொன்று வழியில் இருந்த நடுகல்லை ஆளென நினைத்துக் காலால் உதைத்து, நகம் பெயர்ந்து வருந்தியது. பெயர்ந்து உதிர்ந்திருந்த அதன் நகம் நுங்கின் தோல் போல் சுரவழியில் கிடந்ததாம். நடுகல் அமைக்கக் கல் தேடி, அலைந்து, கண்டெடுத்து, நட்டு மகிழ்ந்ததே பெரும்பான்மை. சில நேரங்களில் பெண் யானைகள் கிடந்தாற் போன்ற குன்றுகளின் பக்கங்களில் இயற்கையாய் அமைந்திருந்த நெடும்பாறைகளையே நடுகற் களாக்கிக் கொண்டனர். அவை புலவர்களால் ‘நட்ட போலும் நடா நெடுங்கல்’ என்று வண்ணிக்கப்படுகின்றன. அக்கற்பாறைகளை நீரால் நனைத்து அவற்றின் அகலிடத்தைச் செதுக்கிச் சமப்படுத்தி இறந்த வீரர்களின் பெயர்களை வரிசையாகப் பொறித்து மகிழ்ந்தனர். பின்னர், மஞ்சள் பூசிச் சிவந்த கரந்தை மலர்களை அம்பால் அறுத்த ஆத்திப்பட்டையின் நாரால் தொடுத்துக் கண்ணிகளாய்க் கட்டிச் சூட்டினர். நடுகற்களின் மீது மயில்தோகை இடுவது பெருமரபாக இருந்துள்ளது. மழவரோ பீலியும் கண்ணியும் சூட்டியதுடன் நெல்லால் ஆன கள்ளும் படைத்துத் துடியடித்துச் செம்மறிக்குட்டியைப் பலியிட்டு வழிபட்டனர்.

குறுந்தொகை சங்க காலக் கோயிற் கட்டட அமைப்புகளைப் பற்றிய தகவல்களேதும் தரவில்லை என்றாலும், அக்கால மக்களின் இறை நம்பிக்கைகள், வழிபாட்டு முறைகள், பலியுணவு இடப்பெறும் பாங்கு எனச் சில அரிய தரவுகளை ஆங்காங்கே பொதிந்து வைத்துள்ளது. மன்றத்திருந்த செங்கடம்ப மரத்தில் அச்சம் தரும் கடவுள் குடியிருந்ததாகக் கூறும் இவ்விலக்கியம், அக்கடவுள் கொடுஞ்செயல் செய்தா ரைத்

துன்புறுத்தும் என்கிறது. குன்றக் கடவுளான முருகனுடன், 'சூர்' என்னும் மலைத்தெய்வங்களும் வணங்கப்பட்டமை, பெண் தெய்வங்களான இவற்றை, 'வரையர மகளிர்', 'சூரர மகளிர்' என்றழைத்தமை என்பன குறுந்தொகை தரும் தரவுகள்.

வெற்றியை உடைய நெடுவேள் என்று புகழப்பட்ட முருகனுக்கு அலரிமாலை அணிவிக்கப்பெற்றது. அவருக்குப் பல்வகை உணவுப்பொருட்களும் தினை போன்ற தானியங்களும் பலியாகத் தரப்பட்டன. சிறிய ஆட்டுக்குட்டிகளைக் கொன்று உயிர்ப்பலியும் காட்டப்பட்டது.

இப்பணிகளைச் செய்த பூசாரிகள், 'வேலன்' எனப்பட்டனர். காதல் வயப்பட்ட மகளிர்தம் உண்மை நிலையறியாத பெற்றோர், தம் மகளிரின் நலிவிற்குக் காரணமறிய, முருக வழிபாட்டு முறைகளில் தேர்ந்தவராய் இருந்த இவ்வேலர்தம் உதவியுடன் அரங் கிழைத்து வெறிஅயர்ந்தனர். இவ்வயர்வுகள் சில போதுகளில் ஓடும் ஆற்றின் ஆற்றிடைக்குறையாகிய துருத்தியிலும் நடத்தப்பெற்றன. பல இசைக்கருவிகள் முழங்க இவ்வயர்வுகளில் வெறியாடிய பூசாரிகள், முருகனைப் போற்றிப் பரவியதுடன் வேற்றுப் பெருந்தெய்வம் பலவற்றையும் வாழ்த்தினராம்.

'வேற்றுப் பெருந்தெய்வம்' என்ற இக்குறுந்தொகைச் சொல்லாட்சி சிறப்புடையதாகும். இதனால், அற்றைநாள் தமிழகத்தில் மக்கள் தெய்வங்களைப் பெருந்தெய்வம், சிறுதெய்வம் என இரு வகைத்தாய்ப் பிரித்து வழிபட்ட பாங்கு தெளிவாவதுடன் பெருந்தெய்வங்கள் பலவாய் இருந்தமையும் புலப்படும். தொடக்கக் காலத்தில் நிலத்தெய்வங்களே பெருந்தெய்வங்களாக இருந்திருக்கவேண்டும். பின்னாட்களில் இத்தகுதி சிவன், பலராமன், திருமால், முருகன், இந்திரன் ஆகியோருக்கு வழங்கப்பட்டிருந்ததைப் பரிபாடலும் கலித்தொகையும் நன்குணர்த்துகின்றன.

புதிய விளைச்சலின் முதற் கதிரைத் தெய்வத்திற்குப் பலியாக இடும் பழக்கம் வழக்கில் இருந்தது. அதனால், அக்கடவுள் 'கடியுண் கடவுள்' எனப்பட்டார். கொல்லிமலையில் இருந்த அச்சமூட்டும் கருங்கண் தெய்வம், அம்மலையின் மேற்குப் பகுதியில் ஓவியப்பாவையொன்றை எழுதியிருந்தது. இந்தக் கொல்லிப்பாவை பல புலவர்களால் பாடப்பெற்றுள்ளது. சூலத்தையுடைய பெண்பாற் கடவுளான கொற்றவை சூலி என்றழைக்கப்பட்டார். மலைப்பக்கத்து உறையும் தெய்வமாகக் காட்டப்படும் இத்தேவிக்குப் பலி யிடுவதும் இவரை வணங்கிக் கையிற் காப்புநூல் கட்டுவதும் இவர் திருமுன்னில் நிமித்தம் பார்த்தல், நற்சொல் கேட்டல் போன்றனவும் அந்நாள் மக்களிடையே பெருவழக்காய்

இருந்தன.

சிவபெருமான், திருமால், முருகன், காமன், பலராமன், சாமன், நான்முகன், ஞாயிறு, கொற்றவை, வேழத்திரு, இந்திரன், திருமகள் ஆகிய சிறப்புத் தெய்வங்களும் மலைத்தெய்வம், கடல்தெய்வம், மரத்தெய்வம், நிலத்தெய்வம், நீர்த்தெய்வம் எனும் பொதுநிலைத் தெய்வங்களும் கலித்தொகையால் சுட்டப்படுகின்றன. சிறப்புத் தெய்வங்களுள் சிவபெருமான், திருமால், முருகன் ஆகிய மூவரும் பல பாடல்களில் இடம்பெற்றுப் பெருந்தெய்வங்களாகக் காட்சியளிக்கிறார்கள். சிவபெருமானின் திருவுருவ அமைதி, அவரது செயற்பாடுகள் கூறும் பாடல்கள் கலித்தொகையில் பலவாய் உள்ளன. மூவெயில் எரித்தது, கங்கையையேற்றது, இயமனை உதைத்தது, இராவணனுக்கு அருளியது, திங்களைச் சூடியது, அம்மையப்பர் கோலம், அருந்தவ முதல்வராய்த் தென்முகக் கடவுளாய் அமைந்தமை எனச் சிவபெருமானின் பல்வேறு திருச்செயல்கள் கலித்தொகையில் உள்ளன. அவற்றுள் சில முதன்முதலாகக் கலித்தொகை யில்தான் இடம்பெறுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

சிவபெருமானின் திருவுருவ அமைதி முடி தொட்டு தாள்வரையிலும் வண்ணிக்கப்பட்டுள்ளது. ஈர்ஞ்



சடை அந்தணராய்க் காட்டப்படும் சிவபெருமானின் மிக்கொளிர் தாழ்சடைகளில் கங்கையும் திங்களும் கொன்றையும் இடம்பெற்றிருந் ன. முக்கண்ணராய் இரண்டு பாடல்களில் பாராட்டப் பெறும் அவரின் சிறப்புக்குரிய கருவியாய் எரிதிகழ் கணிச்சி குறிப்பிடப்படுகிறது. கொலைவன், சீர்மிகு சிறப்பினோன், சீறரு முன்பினோன் என்றெல்லாம் போற்றப்படும் சிவபெருமான் உயர்மலையில் உமையுடன் வீற்றிருந்தார். எண்கையராகக் கடவுள் வாழ்த்து போற்றும் இவர் கைக்கருவிகளுள் கணிச்சி, தலை, வில்லான இமயம், நீர்மலி கரகம் என்பன அடங்கும். அறமுரைக்க வரும்போது கையிலுள்ள நீர்மலி கரகத்தை மரக்கிளையில் தொங்கவிடுவது இவர் பழக்கம். இவர் நிறம் இலவம்பூ, அந்தி,

பெருஞ்சண்பகம் ஒத்தது. ஊர்தியும் கொடியும் ஏறு; கழுத்தோ நீலகண்டம்; தோள்களில் கொன்றைமாலை புரளும்; கடவுள் வாழ்த்தின்படி புலித்தோலை அரைக் கசைத்தவர்; பண்டரங்கம், காபாலம் போன்ற ஆடல்வகைகளுடன் படுபறை பல இயம்பப் பல்லுருவம் பெயர்த்துக் கொடு கொட்டியும் ஆடியவர் இந்த ஆதிரைநாளர். கலித்தொகைதவிர வேறெந்தச் சங்க இலக்கியமும் சிவபெருமானின் தோற்ற அமைதிகள், திருச்செயல்கள் குறித்த இத்தனை விரிவான தகவல்களைக் கொண்டிருக்கவில்லை.

மல்லரை அழித்தமை, கஞ்சன் அனுப்பிய குதிரை அரக்கனைக் கையாலேயே அடித்துக் கொன்றமை, மூவுலகையும் அளந்தமை ஆகிய மூன்று வீரச்செயல்கள் திருமாலின் அருளிச்செயல்களாகக் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன. திருமகள் வீற்றிருக்கும் மார்பன் எனும் பொருள்படத் ‘திருமறு மார்பன்’ என்றழைக்கப்படும் திருமாலின் கைக்கருவிகளாய்ச் சங்கும் சக்கரமும் சுட்டப்படுகின்றன. அவற்றுள் சக்கரப் படையே ‘கொல்யானை அணிநுதல் அழுத்திய ஆழி’ என்றெல்லாம் பலபட விதந்து பாராட்டப்படுகிறது. இருள் நிறத்தரான இப்பெருமான் பாடலுடன் யாழும் கேட்டு இன்புற்றுக் கடலிடத்தே பாம்பணையில் பள்ளிகொண்டவர். மாலைகள் மணக்கும் மார்பினரான இப்பெருமானைப் போற்றிப் பாண்டியருக்கு வாழ்த்துக் கூறுவது போல் சில கலிப்பாடல்கள் அமைந்துள்ளன. இவரது திருவடியைத் தலையால் வணங்கி முல்லை நில ஆயர் ஒருவர் தலைவியிடம் சூளுரைப்பது, கலித்தொகைக் காலத்துத் திருமால் படிமங்களுக்கும் அப்படிமங்கள் இருந்த கோயில்களுக்கும் சான்றாகிறது.

முருகனைப் பற்றிய செய்திகள் கலித்தொகையில் குறைவாகவே உள்ளன. ஆலமர்செல்வரான சிவபெருமானின் திருமகனாக இரண்டு பாடல்களில் சுட்டப்படும் முருகனின் கைவேல் பெரிதும் பாராட்டப்பட்டுள்ளது. ‘சூர்கொன்ற செவ்வேல்’ ‘அடங்காப் போர்வேல்’ என்று பாராட்டப்படும் இவ்வேலால் மாகடல் கலக்கமுற உள்சென்று ‘சூர்’ மாமரத்தை வெட்டிய முருகனின் செயல் இரண்டு பாடல்களில் இடம்பெற்றுள்ளது. சிவந்த நிறமுடைய முருகன் தாழ்ந்து விளங்கிய வெண்ணிற ஆடையுடன் திகழ்ந்தார். அவருக்கு மக்கள் விழா எடுத்ததுடன், உலக்கைப் பாடல்களின் நாயகனாகவும் கொண்டிருந்தனர். அவரது இருப்பிடமாகப் பேசப்படும் குன்றொன்றை உரையாசிரியர் பரங்குன்றமாய்க் காணுகிறார்.

பலராமனைப் பற்றிப் பேசும் கலிப்பாடல்கள் அவரை ‘நம்பி மூத்தபிரான்’ என்றழைக்கின்றன. வெண்ணிறத்தவராகவும் பூங்குழை உடையவராகவும் காட்சியளிக்கும் அவரது மார்பைத் துழாய்மாலையும்

சிவந்தமாலையும் அணிசெய்கின்றன. கொடிய வலிமையுடைய கலப்பைப் படையைக் கொண்ட இப்பெருமானின் கொடி பனைக்கொடி. திருமாலின் மகனாகக் கொள்ளப்படும் காமன் சுறாமீன் கொடியோனாய்க் கையில் படையுடையாராய்க் காட்டப்படுகிறார். காமனுக்குக் கோட்டம் இருந்தது. காதல் வயப்பட்ட பெண்களால் பெரிதும் போற்றி வணங்கப்பட்ட காமனுக்குப் பெண்கள் பால்மடை தந்தனர். ஒருவரையொருவர் விரும்புமாறு செய்யும் கணையைக் கையில் உடையவராகக் கொண்டாடப்பட்ட காமனின் உடன்பிறப்பாகச் சாமன் கருதப்பட்டார். நீர் நிறைந்த காலத்தில் ஆற்றிடைக்குறையில் காமனுக்கு விழா எடுத்தனர். இளவேனில் காலத்தில் காமன்விழாவில் விருந்து படைக்கப்பட்டது. தலைவரைப் பிரிந்திருக்கும் நிலையில் தங்கட்குக் காமன் கொடுமை செய்வதாகக் கருதிய பெண்கள், காமனின் கொடுமைகளை இயமன் தன் ஓலையில் குறித்துக்கொண்டு தண்டிப்பார் என்று நம்பினர். சில போதுகளில் அது போல் தண்டிக்க வேண்டாமென இயமனுக்கு வேண்டுகோளும் வைத்தனர்.

படைத்தல் தொழிலைச் செய்த முதியவராய் நான்முகனும் எல்லாம் உணர்ந்து, பெருங்காட்டிடத்து அமர்ந்தவராய்க் கொற்றவையும் காட்டப்படுகின்றனர். கொற்றவைக்குப் பேய்கள் நொடி சொன்னதாக நம்பப்பட்டது. இவர்கள் தவிர வேழத்திருவாய் கஜலட்சுமியும் வச்சிரப்படையும் ஆயிரம் கண்களும் உடையவராய் இந்திரனும் கொடியவர் கொடுமைகள் குறிக்கும் ஓலையைக் கையில் கொண்டவராய் வலிமைமிகு இயமனும் வலம் வருகின்றனர்.

அறம் கடவுளாகக் கருதப்பட்டது. பலி பெறும் அணங்குகளும் தெய்வப்பெண்டிரும் மக்கள் வழிபாட்டைப் பெற்றிருந்தனர். தொழிலர்க்கு அவரவர் தொழில் சார்ந்த பொருட்கள் தெய்வமாக விளங்கின. தேரையே தெய்வமாகக் கருதிய தேரோட்டிகள் அதைத் தொட்டுச் சூளுரைத்தனர்.

புத்தேளிர்க் கோட்டங்களும் கடவுட் கடிநகர்களும் ஒவ்வொரு ஊரிலும் இருந்தன. தன் மகனைத் தோழியோடு விடுத்த தலைவி ஒருத்தி, அவனை அவ்வூரிலுள்ள அனைத்துத் திருக்கோயில்களையும் வலம்வரச் செய்து அழைத்துவருமாறு பணித்தாள். இதனால், தெய்வத் திருக்கோயில்களை மக்கள் வலம்வருதல் வழக்கில் இருந்ததையும் சிறுவர்கள் அப்பழக்கத்தைத் தவறாது மேற்கொள்ளுமாறு செய்யப்பட்டதையும் அறியமுடிகிறது.

# கோவிலூர் ஆதீன வெளியீடுகள் கோவிலூர் புதையல்கள் - 13

## சீர்வளர்சீர் காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள் இயற்றிய கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம்

**- நூல் அறிமுகம்**



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

இந்நூல் கோவிலூர் மடத்தின் கிளைமடமான திருப்பூவணம் வேதாந்த மடத்தை உருவாக்கிய காசிகாநந்த ஞானாசாரிய சுவாமிகளால் 1961இல் இயற்றப்பட்டது. 1967இல் மதுரை, வி.சுப்புராயலு நாயுடு அச்சகத்தில் அச்சிடப்பட்டுள்ளது. மொத்தம் 56 பக்கங்களைக் கொண்டுள்ளது.

உலகில் பிறந்த மனிதர்கள் பிரம்ம ஞானம் (இறைவெளி முதற் பொருளாகவும், ஆறறிவு கொண்ட மனம் இறுதியாகவும் உள்ளது. ஆதி முதல் அந்தம் வரையில் அனைத்தும் இணைத்து ஒரே அகக் காட்சியாகக் காணக்கூடிய பேரறிவு பிரம்ம ஞானம் ஆகும்) பெறுவதற்கு குருவினை அடைய வேண்டும். அக் குருவினை உணர்த்துவதற்காக எழுதப்பட்டதே இந்நூல் என விளக்கம் தருகிறார் சுவாமிகள்.

### நூல் அமைப்பு

இந்நூலின் முதற் பகுதி “கோவிலூர் மடம் பரம்பரை விளக்கம்” என்னும் தலைப்பில் அமைகிறது. கோவிலூர் மடத்தைத் தோற்றுவித்த, கோவிலூர் ஆண்டவர் முதல், சீர்வளர்சீர் அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் வரையிலான வரலாற்றுத் தகவல்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இந்நூலின் இரண்டாம் பகுதியில், கடலிலிருந்து எழும்

அலை, அலைகளில் காணப்படும் நீர்க் குமிழிகள் என்பனவற்றை மறை தலைப்பாகக் கொண்டு தலைப்புகள்கொடுக்கப்பட்டுள்ளன. தரங்கம் என்பது அலையைக் குறிக்கிறது. இந்நூலில் 7 தரங்கங்கள் தலைப்பாக அமைந்துள்ளன. புத்புதம் என்பது அலைகளில் உருவாகும் நீர்க்குமிழியைக் குறிக்கிறது. 9 புத்புதங்கள் தலைப்பாக அமைந்துள்ளன. முன்னுரை, முடிவுரை இரண்டும் சேர்த்து 18 தலைப்புகளால் அமைக்கப்பட்டுள்ளதுஇந்நூல்.

முன்னுரையில், காசிகாநந்த ஞானாசாரிய சுவாமிகள், உலகில் உள்ள உயிர்களின் எண்ணிக்கையைக் குறிப்பிடும் போது,

ஊர்வன - 11,00,0000
மானுடர் - 9,00,000
நீர்வாழ்வன - 10,00,000
பறவைகள் - 10,00,000
நாற் கால் மிருகங்கள் - 10,00,000
தாவரங்கள் - 18,00,000
தேவர்கள் - 16,00,000
ஆக மொத்தம் - 84,00,000
உயிரினங்கள்

இவ்வுலகில் இருப்பதாகச் சுட்டுகிறார். இவ்வுயிரினங்களில் மனித இனத்திற்கு மட்டும், வாழ்வதற்கு இரண்டு மார்க்கங்கள் உள்ளன. 1. விரவிருத்தி ( உலக வாழ்க்கையை நன்றாக, தர்ம நியாயப்படி நடத்துவது), 2. நிவிர்த்தி( உலக வாழ்வை விட்டுவிட்டு, அதை முடித்துவிட்டு.இறைவனோடு ஒன்றி, பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை பெறுவது).

இந்த நிவிர்த்தி மார்க்கத்தினைப் பின்பற்ற வழிகாட்டவே பல மடங்கள் தோன்றின. அம்மடங்கள் கற்பிக்கக் கூடியவை மூன்று கொள்கைகள். 1. பேத வாதம் (கண்ணொளியும், கதிரவன் ஒளியும் போல், இறைவனும் உயிர்களும் வேறு வேறு என்பது), 2. விசிட்டாத்வைத வாதம் (ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒரே பொருளால் ஆனவை. பரமாத்மாவிலிருந்து வெளிப்பட்டது ஜீவாத்மா என்பது) 3. அபேத வாதம் (இறைவனும் உயிர்களும் பொன்னும் அணிகலன்களும் போல ஒன்றே வேறல்ல என்பது) இவற்றுள் அபேத வாத வேதாந்தமே சிறந்தது என்கிறார்.

இவ் அபேத வாதத்தைப் பின்பற்றிச் செல்லும் மனிதர்கள், தேகபலம், மனோபலம் ஆகிய வேறுபாடு காரணமாக எல்லோராலும் ஒரே பிறப்பில் இறைவனை அடைய இயலாது. மூன்றாவது ஜென்மத்தில்தான் அடைகின்றனர்.

அவ்வாறு இல்லாமல் நிகழ்காலத்திலேயே இறைவனை அடையும் வழிகளைச் சொல்வது இந்நூல் என்று அறிமுகப்படுத்துகிறார் காசிகானந்த ஞானாசாரிய சுவாமிகள்.

**தரங்கம் 1,2,3**

இம் மூன்று தலைப்புகளும், சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய மூவரின் இயல்பினையும்,குணநலன்களையும்




உ
சிவமயம்.
ஸ்ரீ மஹா கணபதியே நம:
# கோவிலூர் மடத்தின்
# அத்புத மகிமா அகூபாரம்
(கடல் - சூரியன்)



இது
என் வகை விருதாவலியோடு கூடிய
திருப் பூ வணம், வேதாந்த மடஸ்தாபகர்
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்
இயற்றியது.
மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரசில்
பதிப்பிக்கப்பட்டது.

விலை] 1967. [பைசா 75

திருப் பூ வணம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றின. அச்சிடப்பட்டன.

| | | |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஞ்சூஷா வசனம் | 2 50 |
| 2 | விசார சாகரம் வசனம் | 2 50 |
| 3 | கதா சரித் சாகரம், கதை வசனம் | 2 25 |
| 4 | ஹரிமீடே, ஹரிதத்வ முக்தாவலி பத உரை | 0 75 |
| 5 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசனம் | 0 50 |
| 6 | நைஷ்கர்மிய சித்தி வசனம் | 0 50 |
| 7 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசனம் | 0 50 |
| 8 | ஸ்வாராஜ்ய சித்தி வசனம் | 0 50 |
| 9 | பகவத் கீதை 15வது அத்தியாயம், சம்ஸ்கிருதம், தமிழ் பத உரை, தமிழ் பாட்டு, தமிழ் உரை, மூர்க்க சதகம் சம்ஸ்கிருதம் தமிழ் பத உரை, நிர்குண அஷ்டோத்தர சத நாமாவலி, சம்ஸ்கிருதம் தமிழ், சாது சேர்ந்தது | 0 50 |
| 10 | வேதாந்த பரிபாஷை வசனம் 0 44 [வசனம் | 0 25 |
| 11 | மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜ யோக பாஷ்யம் | |
| 12 | ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம் வசனம் | 0 25 |
| 13 | வேதாந்த சஞ்ஞா வசனம் | 0 13 |

உரை நூல்.

| | | |
|---|---|---|
| 14 | சாசர ஜீவ வாதக் கட்டளை, சந்தியார்த்தப் பிரகாசிகை உரை | 2 00 |
| 15 | சிதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை | 2 00 |
| 16 | மேற்படி, சூத்திர விளக்க உரை | 0 50 |
| 17 | சசி வர்ண போதம், பதார்த்த பாஸ்கரன் உரை | 2 00 |
| 18 | மகா ராஜத் துறவு-மகப் பிரசாதினி உரை | 2 00 |
| 19 | பக்தி (வைராக்கிய) சதகப் பத உரை பொழிப் புரை | 1 50 |
| 20 | மேற்படி உரை, உதாரணக் கலி, பக்தி ரச உரை | 1 00 |
| 21 | வைராக்கிய தீபம், பத உரை பொழிப் புரை | 0 50 |
| 22 | மேற்படி உரை, உதாரணக் கலி, சுடர் உரை | 1 00 |
| 23 | பிடாசாரம் பால போதினி உரை | 0 50 |
| 24 | கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீபிகை உரை உதாரணக் கலி 233-க்கு, ஆதித்தன் உரை | 2 50 |
| 25 | சர்த்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி, பரிமள தீப உரை | 1 50 |
| 26 | திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி மணி மாலை, சிற சுடர் உரை | 0 75 |
| 27 | ஹ்ரீம் சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி, நந்தா ஒளி உரை | 0 25 |

எடுத்துரைக்கிறது.

### புத்புதம் 1முதல் 7 வரை

புத்புதம் 1இல் கோவிலூர் ஆண்டவர் திவ்விய வரலாறும், புத்புதம் 2இல் துறவாண்டவர் வரலாறும், புத்புதம் 5இல் சீர்வளர்சீர் இராமசாமி ஞானதேசிகர் வரலாறும், புத்புதம் 6இல் சீர் வளர் சீர் வீரசேகர ஞானதேசிகர் வரலாறும், புத்புதம் 7இல் சீர் வளர் சீர் அண்ணாமலை ஞானதேசிகர் வரலாறும், புத்புதம் 8இல் அண்ணாமலை சாமி என்னும் சீர்வளர்சீர் மகாதேவ ஞானதேசிகர் வரலாறும், புத்புதம் 9இல் சீர் வளர் சீர் சோமசுந்தர ஞானதேசிகர் வரலாறும் குறிப்பிடப்படுகின்றன.

### தரங்கம் 4,5,6,7

தரங்கம் 4 “சிருஷ்டி” என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. இதனுள் கோவிலூர் மடாதிபதிகளால் செய்யப்பட்ட இறைத்திருப்பணிகள் சுட்டப்படுகின்றன.

தரங்கம் 5 “ஸ்திதி” என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. இதனுள், கோவிலூர் மடம் மடாதிபதிகளால் காக்கப்பட்ட செய்திகள் சுட்டிக்காட்டப்படுகின்றன.

தரங்கம் 7 “அத்வைதத்தை எங்கும் விருத்தி பண்ணுதலும், தென்னாடு பூராப் பரப்புதலும்” என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. இதனுள், அத்வைதத்தைப் பரப்ப மடாதிபதிகள் மேற்கொண்ட செயல்கள் சுட்டிக்காட்டப்படுகின்றன.



## அத்புத மகிமா அகூபாரம்

நூலின் இணைய இணைப்பு

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்

## இருமையிலும் இன்பம்



**- வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்**

மனிதன் இந்த உடம்பு பெற்றதன் பயன் மறுபடியும் இத்தகைய உடம்பினுள் வராமல் இருப்பதே. முள்ளை முள்ளால் எடுப்பதைப் போல இந்தப் பிறவியால் இனிப் பிறவியே வராமல் செய்துவிட வேண்டும். பிறவி எல்லையில்லாமல் தொடர்ந்து வருவது. முன் பிறவி யிலே செய்யும் கன்மத்துக்கு ஈடாக ஜன்மம் கிடைக்கிறது. இந்த ஜன்மத்தில் மறுபடியும் கன்மங்களைச் செய்கிறோம். அவற்றின் விளைவாக மீட்டும் மீட்டும் பிறவிகள் தொடர்ந்து வருகின்றன. இப்படி எல்லை இல்லாமல் தொடர்ந்து வருவதால், அலைகள் தொடர்ந்து வரும் கடலைப் பிறப்புக்கு உவமையாக்குவது மரபு.

"தனியனேன் பெரும்பிறவிப்
பவ்வத்து எவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு"

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். இந்தக் கடலைக் கடப்பது எப்படி? திருவள்ளுவர் சொல்கிறார் :

பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

பெரிய கடலாகிய பிறவியை நீந்துவதற்கு இறைவன் திருத்தாள் புணையாக உதவும். கடலில் ஆழாமல் மிதந்து கடக்க

வேண்டுமானால் கடலில் ஆழாத பொருள்தான் புணையாக உதவும். நாமோ நெஞ்சமென்ற கல்லைக் கட்டிக் கொண்டு பிறவிக் கடலில் விழுந்திருக்கிறோம்: கல் சிறியதானாலும் நீரில் போட்டால் அமிழ்ந்துவிடும். ஆனால் மிகப் பெரிய கல்லானாலும் நீரின் மேல் மிதக்கும். பெரிய கட்டையின் மேல் வைத்தால், அந்தக் கட்டையின் சார்பால் அது கீழே ஆழாது. அதற்கு ஆதாரமாக உள்ள கட்டை ஆழாமல் காத்து நிற்கும்.

இறைவன் பிறவிக் கடலில் அமிழாதவன். பிறவா யாக்கைப் பெரியோன்" என்று சிலப்பதிகாரம் கூறும். ஆதலால் அவன் திருத்தாள் நமக்குப் புணையாக உதவும். இயல்பாகப் பிறவிக் கடலில் ஆழ்வது ஆன்மா. இறைவனுடைய திருவடியைப் பற்றிக் கொண்டால் ஆழாது.

இறைவனுடைய திருவடியை மனத்தால் நினைப்பதும், வாயினால் புகழ்வதும், உடம்பால் வணங்குவதும் அவ்வடியோடு சேர்வதாகும். இடை விடாது நினைப்பவர் திருவடியைச் சேர்ந்தவர்; அவரையே அடியார் என்பர். காரைக்கால் அம்மையார் அப்படி இறைவன் தாளைச் சேர்ந்தவர் அதனால் அவருக்குத் துன்பமே இல்லாமல் போயிற்று. "தாம்ஆர்க்கும் குடியல்லாத் தன்மை யான சங்கரன்நற் சங்கவெண் குழை ஓர் காதில்கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க் கொய்ய மலர்ச்சேவடியிணையே குறுகின' அப்பர் சுவாமிகள் அந்தச் செயலால்

"...........நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்;
ஏமாப்போம்; பிணி அறியோம்,
பணிவோம் அல்லோம்;
இன்பமே எந்நாளும்; துனபம் இல்லை"

என்று வீறு பேசுகிறார். கடலை நீந்தின பிறகு கடலில் உள்ள அலைக்கும் திமிங்கிலத்துக்கும் அஞ்ச வேண்டிய நிலை இல்லை அல்லவா?

பெரிய கடலில் அகப்பட்டு அலைகளால் மோதுண்டு அல்லற்பட்டுத் தடுமாறிய ஒருவர் தமக்குக் கிடைத்த ஒரு தெப்பத்தைப் பற்றிக்கொண்டு கரையேறிய பிறகு, "அப்பாடா இனித் துன்பமே இல்லை!" என்று இன்பப் பெருமூச்சு விடுவதுபோல அம்மையார் பாடத் தொடங்குகிறார். "ஓ! இப்போது நாம் கரையேறி விட்டோம்; உய்ந்து போகிறோம்'என்று பெருமிதத்தோடு பன்மையில் சொல்கிறார்.

இனி ஒநாம் உய்ந்தோம்.

'எப்படி உய்ந்தீர்கள்?' என்று அவர் நெஞ்சம் கேட்கிறது. அவர் தம் நெஞ்சை வேறாக வைத்துப் பேசுகிறார். அவரோடு இணைந்து நின்று பெருஞ் சேமம் செய்த நெஞ்சு அல்லவா? அது தவித்த தவிப்பை அவர் அறிவார். ஆகவே,"நெஞ்சமே, நாம் உய்ந்து போனோம்" என்று மகிழ்ச்சிக் குரலை எடுத்துச் சொல்கிறார்.

'எப்படி உய்ந்தோம் என்றா கேட்கிறாய்? இதோ பார்: இறைவன் திருத்தாள். எதை எதையோ அடைந்தும் இடர் அறாமல் இன்னலுற்ற நமக்கு இறைவன் திருத்தாள் புணையாகக் கிடைத்தது. அதைப் பற்றிக் கொண்டு உய்ந்தோம். புணையைக் கடலில் நீந்தியவுடன் விட்டு விடுவார்கள். இறைவன் திருவடி அத்தகையது அன்று. சுரைக்காயைக் கட்டிக் கொண்டு நீந்தியவன் அதைத் தன் வீட்டுக்கு எடுத்துச்செல்வது போல நாம் அந்தத் திருவடியை விடாமல் சேர்ந்து விட்டோம். பிறவிக் கடலில் நீந்தும் போது புணையாக இருந்த அதுவே, நமக்கு இன்பம் தரும் பொருளாக இருக்கிறது. ஆதலால் அதைச் சேர்ந்த நமக்கு இனி ஓர் இடரும் இல்லை.

பிறந்தவர்கள் கன்மங்களைச் செய்து கொண்டே இருக்கிறார்கள். பிறவி மேலும் மேலும் புண்ணிய பாவங்களைப் பெறச் செய்து அவற்றுக்கு உரத்தை ஊட்டுகிறது. அலைமேல் அலை வந்து மோதுவது போலப் பிறவியின் மேல் பிறவி வந்து கொண்டே இருக்கிறது. பிராரப்த வினையைக் கழிப்பதற்குப் பிறவி வருகிறது. அப்படிப் பிறந்து வினைப்பயனை நுகர்ந்து கொண்டிருக்கும்போதே புதிய வினைகளைச் செய்கிறாம். அவை ஆகாம்யம் எனப்படும். அவை வரும் பிறவிகளுக்கு வித்தாக இருக்கின்றன. ஆகவே முன்னை வினை பிறவிக்கு ஏது ஆகிறது; பிறவியோ மறுபடியும் வினைக்கு ஏதுவாக நிற்கிறது. இந்தச் சுழற்சியில் அகப்பட்டவர்களுக்கு மீட்சியே இல்லை. இறைவன் திருத்தாளாகிய புணை இல்லாவிட்டால், மீளாப் பிறவியில் அலைக்கழிய வேண்டியதுதான்.

## வினைக்குஅடலை ஆக்குவிக்கும் மீளாப்பிறவி

என்று காரைக்கால் அம்மையார் சொல்கிறார்.

இறைவன் தாளைப் பற்றிக் கொண்டமையால் இந்த வாழ்வே இன்ப வாழ்வாகிவிடுகிறது.

இனிமேல் வரும் வாழ்வோ என்றும் மங்காத பேரின்ப வாழ்வு. பிறப்பென்னும் கடலில் விழவேண்டிய நிலை இனி இல்லை.

இப்போது எந்தவிதமான இடரும் இல்லை என்றவர், இனிமேல் துன்பத்துக்கு இடமாகிய பிறவியே இல்லை, அந்தப் பெருங்கடலை நீந்தி விட்டோம்' என்கிறார். இப்போதே இந்த உறுதி வந்துவிட்டது. சீவன் முக்தி நிலை என்று அதைச் சொல்வார்கள்.

வறுத்த நெல்லுக்கும் மற்ற நெல்லுக்கும் வேறுபாடு உண்டு. வறுத்த நெல் முளைக்காது. சீவன் முக்தர்கள் வறுத்த நெல்லுக்கு ஒப்பானவர்கள், வறுத்த நெல்லை நிலத்தில் போட்டுப் பார்த்துத்தான், முளைக்குமா, முளைக்காதா என்று தெரிந்து கொள்ளவேண்டும் என்பது இல்லை. வறுத்த நெல் என்றாலே முளைக்காத நெல் என்று உறுதியாகச் சொல்லலாம். அவ்வாறே இந்தத் தேகம் உள்ள போதே இறைவன் திருத்தாளில் ஒன்றிய சீவன் முக்தர்களுக்கு இனிப் பிறப்பில்லை என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆதலினால்தான் அம்மையார், இனிப் பிறவிக்கடல் இல்லை; அதை நீந்திவிட்டோம் என்று சொல்கிறார்.

"இனிஓர்
வினைக்குஅடலை ஆக்குவிக்கும் மீளாப் பிறவிக்
கனைக்கடலை நீந்தினோம் காண்.

இறைவன் திருத்தாளை நினைந்து அதனோடு இணைந்தவர் களுக்கு இந்த வாழ்விலேயே இடரில்லா இன்பநிலை உண்டாகும்; இனிமேல் பிறவாத பேரின்பப் பெருவாழ்வு கிடைக்கும். இப்படி ஒரு சிறந்த நிலை வந்துவிட்டால், "ஓ! நாம் உய்ந்து விட்டோம்" என்று பெருமிதம் அடைவது நியாயந்தானே?.

இனியோ நாம் உய்ந்தோம்: இறைவன் தாள் சேர்ந்தோம்;
இனிஓர் இடர்இலோம், நெஞ்சே !ஷஇனிஓர்
வினைக்குஅடலை ஆக்குவிக்கும் மீளாக்
கனைக்கடலை நீந்தினோம் காண்.

இறைவன் தாளை இடைவிடாது சிந்திப்பார்க்கு இம்மை இன்பமும் மறுமை இன்பமும் எய்தும் என்பது இப்பாட்டின் கருத்து.(இது அற்புதத் திருவந்தாதியில் 16ஆவது பாட்டு).

# திருவடித் தீர்த்தம் பெற்றுய்ந்த

# பகிர்ந்தளிப்பதில் இன்பம் பெற்ற முத்கலர்



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

முற்காலத்தில் முத்கலர் என்றொரு மகரிஷி இருந்தார். பார்மியாசா என்றொரு முனிவரின் மகன். தானம் தர்மம் என்பதற்கு எடுத்துக்காட்டு இவர்தான். தான் செய்த புண்ணியங்களால் தன் உடலோடு சொர்க்கம் செல்லும் வாய்ப்புக் கிட்டியும் மறுத்தவர் . அப்படி இவர் செய்த புண்ணியம் என்ன? ஏன் சொர்க்க லோகம் செல்வதை மறுத்தார் என்பதைப் பற்றி அறிவோம் வாருங்கள்.

களத்து மேட்டில் அறுவடையான சோளதானியங்கள் அடித்துத் தூற்றப்பட்டுக் கொண்டிருந்தன. அத்தனை தானியங்களையும் மூட்டைகளில் அடைத்து அந்த வயலுக்குரியவர்கள் எடுத்து சென்றபின் அந்த வயலில் இறங்கினார் முனிவர் முத்கலர். அங்கே சிதறிக் கிடந்த தானியங்களைப் பொறுக்கிச் சேர்த்தார். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வயலில் இருந்தும் முடிந்த அளவு தானியங்களைக் கொண்டு சென்று வீட்டில் சேர்ப்பார் முத்கலர்.

அவருக்கு ஒரு மனைவியும் மகனும் இருந்தார்கள். ஒவ்வொரு அமாவாசையின் போதும், ஒவ்வொரு பௌர்ணமியின் போதும், இந்தத் தானியங்களை எல்லாம் குத்திப் புடைத்துக் கஞ்சியாக்கி இஷ்டிகிரிதா என்னும் வேள்வி செய்வார். தர்சம் பௌர்ணமாஸ்யம் என்ற வேள்விச்



சடங்குகளைச் செய்து இந்திரனுக்கும் பிற தேவர்களுக்கும் அந்த உணவில் பங்களிப்பார். அதன் பின் முன்னோர், முனிவர், வாயில்லா ஜீவன்கள், மனிதர்கள் ஆகியோருக்கும் ஈந்து, அதன் பின் உண்ணும் பழக்கம் உள்ளவர் அவர்.

உஞ்சவிருத்தி முறையில் உணவைப் பெற்றுப் பதினைந்து நாட்களுக்கு ஒரு முறையே அவர் விருந்தளித்தாலும் அதை ஏற்றுக்கொள்ள இந்திரன் முதலான தேவர்களும் மனிதர்களும் மற்றுமுள்ள அனைவருமே ஆவலோடு காத்திருந்தார்கள். பொறாமை இல்லாத தூய குணமும், அடக்கமும் அமைதியும் கொண்ட அவர் பகிர்ந்தளிக்கும் அந்தக் கஞ்சி உணவே அனைவருக்கும் அமிர்தம் பெற்ற மகிழ்ச்சியை அளித்துக் கொண்டிருந்தது.

முத்கலரின் பெருமையும் கீர்த்தியும் எங்கெங்கும் பரவியது. எதற்கும் ஆசைப்படாமல் ஒரு மனிதனா, இப்பூமியில் பிறந்தும் பொன் பொருள் போகம் என அதன் எந்தக் கவர்ச்சிக்கும் மயங்காமல் இப்படி ஒரு மனிதன் இருக்க முடியுமா என வியந்து அவர் மனதின் சமநிலையைக் குலைத்து அவரை எப்படியும் வீழ்த்தியே ஆகவேண்டும் என்ற துர் எண்ணம் கொண்டார் துர்வாசர்.

ஒருமுறை சோளத்தைக் கஞ்சியாகக் காய்ச்சி தேவர்களுக்கும் மற்றுமுள்ளோருக்கும் படைத்துவிட்டு முத்கலர் தம் குடும்பத்தினருடன் உணவருந்த அமர்ந்தார். தகுந்த

நேரம் பார்த்துக் காத்திருந்த துர்வாசர் முத்கலரின் வீட்டிற்குச் சென்று "எனக்குப் பசிக்கிறது. உணவு வேண்டும்" எனக் கேட்டார். உணவருந்தும் போது வந்துவிட்டாரே என்று கொஞ்சம் கூட மனம் கோணாது வந்த விருந்தினரை உபசரித்துக் கைகால் கழுவிக் கொள்ளவும், அருந்தவும் நீர் கொடுத்து ஆசனம் கொடுத்தார் முத்கலர்.

முதலில் தனக்கு வைத்திருந்த கஞ்சியை எடுத்து வந்து கொடுத்தார் முத்கலர். அதை அப்படியே அருந்திய துர்வாசர் பசி அடங்காததுபோல் அமர்ந்திருக்கத் தன் குடும்பத்தாருக்கு வைத்திருந்த கஞ்சியையும் கொண்டு வந்து வைத்தார். அதையும் மிச்சமில்லாமல் குடித்தபின் பாத்திரத்தில் மீதமாய் ஒட்டி இருந்த கஞ்சியையும் தன் உடம்பில் தடவியபடி வெளியேறினார் துர்வாசர்.

இதை எல்லாம் கண்டு துளிக்கூடக் கோபப்படாமல் மௌனமாய் உள்ளே சென்றார் முத்கலர். இதேபோல் அடுத்தடுத்து ஆறு பௌர்ணமி அமாவாசைகளின் போதும் திடீரென முத்கலர் வீட்டிற்கு வந்து இவ்வாறு அவர் உஞ்சவிருத்தி எடுத்து வந்து சமைத்த உணவை முழுமையாக உண்டுவிட்டுச் சென்றுவிடுவார்.

இவ்வாறு பலமுறை செய்தும் முத்கலர் தன் சமநிலை குலையாமல், கோபம், பதட்டம், வெறுப்பு அடையாமல் இருந்ததைப் பார்த்த துர்வாசருக்கு அவர்பால் பெரிதும் ஈர்ப்பு ஏற்பட்டது. "உணவுக்காகவே இவ்வுலகில் மனிதர்கள் உழைக்கிறார்கள். உணவாலேயே உயிர் நிலைத்திருக்கிறது. பசியின் வேட்கையையும், உணவின் சுவையையும் உணர்ந்தும் நீ பொறுமை காத்தது உன் புலனடக்கத்தைக் காட்டுகிறது. இதுவே உன் சுத்தமான இதயத்தால் அடைந்த தூய துறவு. உனது இச்செயலால் நீ அருள் உலகுக்குச் செல்லும் வழியை அடைந்துவிட்டாய். உன் இத்தூய உடலுடன் சொர்க்கலோகம் செல்வாய்" என வரம் கொடுத்தார்.

அவர் சொன்னதுதான் தாமதம். அன்னங்களும் கொக்குகளும் பூட்டப்பட்ட கிண்கிணி மணிகள் கட்டப்பட்ட நறுமணம் நிறைந்த, அழகிய வண்ணங்களோடு கூடிய நினைத்த இடம் செல்லக்கூடிய ஒரு தேருடன் தேவதூதன் ஒருவன் தோன்றினான். " மாபெரும் தவசியே. உங்கள் தவத்தின் பலனை அடைந்துவிட்டீர்கள். எப்போதும் மகிழ்ச்சியையே அளிக்கும் சொர்க்கலோகத்தில் கொண்டு சேர்க்கும் இந்தத் தேரில் ஏறுங்கள்." என வேண்டினான்.

"சொர்க்கமா.. அதன் யோகங்கள்

தோஷங்கள் என்னென்ன” என வினவினார் முத்கலர். ”தேவர்கள், ஸத்யசுக்கள், வைஸ்வசுக்கள், தர்மர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள் ஆகியோர் அங்கே இருக்கிறார்கள். அதன் யோகங்கள் என்னவெனில் அங்கே பொன் மேரு இருக்கிறது. பசி, தாகம், சோர்வு, தூக்கம் ஏற்படாது. சுகந்த நறுமணம் வீசும், இனிமையான ஓசையால் நிரம்பி இருக்கும். ஒளிமயமாய் இருக்கும். துக்கம், மூப்பு, பிணி கிடையாது.” என்று கூறி நிறுத்தினான். மேலும் “அதற்கு மேலும் இந்திர லோகம், பிரம்ம லோகம் ஆகிய 33 லோகங்கள் இருக்கின்றன. பிரம்மலோகத்தில் ரிபுக்கள் எனப்படுபவர்கள் வசிக்கிறார்கள். அவர்கள் புலன்களுக்குப் புலப்படாத தெய்வீக உருவம் கொண்டவர்கள். கல்பம் மாறினாலும் அவர்களுக்கு மாற்றம் ஏற்படாது ” என்றான்.

முத்கலர் கூர்ந்து நோக்க சிறிது தயங்கியபடி “அதன் தோஷங்கள் என்னவெனில் ஒவ்வொரு உயிரும் அங்கு சென்றபின் தன் புண்ணியத்தின் பலனை அனுபவித்து ஆனந்தத்தில் திளைக்கும். தம் நல்வினையின் கணக்குக் குறையக் குறைய திரும்பப் பூமியில் விழுந்து மனிதப் பிறப்பு எடுக்க வேண்டும். இதுவே சொர்க்கலோகம், இந்திரலோகம், பிரம்மலோகம் ஆகியவற்றில் நடைமுறை. மேலும் அங்கே புண்ணியத்தின் கணக்கைத் தீர்க்கலாமே தவிர இப்பூலோகம் போல் புண்ணியத்தைப் பெருக்க முடியாது. மனிதப் பிறப்பு ஒன்றே அதைச் செயலாக்கம் செய்ய வல்லது” என்றான்.

”குறைகளற்ற நித்ய தெய்வீக உலகம் என்று ஏதும் உள்ளதா?” என முத்கலர் கேட்க, அத்தேரோட்டியோ,” இருக்கிறது ஐயனே, அது பிரம்மலோகத்திற்கும் மேலே உள்ள பரப்பிரம்மம் என்று அழைக்கப்படும் விஷ்ணுவின் பதமான சுத்தவெளி. நித்யமாய் ஒளிரும் தன்மை உடையது. நான், எனது என்பதை அடக்கிப் புலன் நுகர்ச்சி அற்று யோகமும் தியானமும் புரிபவர் மட்டுமே அங்கு செல்ல முடியும்”

“புண்ணியத்தைப் பெருக்கமுடியாத, திரும்பப் பூமியில் பிறப்பெய்து வீழச் செய்யும் சொர்க்கலோகம் எனக்கு வேண்டாம். நீ செல்க. இவ்வளவு தூரம் எனக்காக வந்ததற்கு நன்றி.” என்று முத்கலர் உறுதியாக மறுக்கவே திரும்பிச் சென்றான் தேவதூதன். தனது சித்த சுத்தியால் இந்திரியங்களை அடக்கித் தன் ஞான தியான யோகத்தால் விஷ்ணுவின் பிரம்மபதத்தை அடைந்தார் முத்கலர். கர்மபூமியே புண்ணியம் பெருக்கும் இடம் என்று தீர்க்கமாய் செயல்பட்ட இவர் வணங்கத்தக்கவர்தானே.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 11



**வே.இராமசாமி,** B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# திருக்கோடிக்காவல்

பகுதி – 1

### திருக்கோடிக்காவல்

திருக்கோடிக்காவல் எனும் இத்தலம் கும்பகோணம், ஆடுதுறைக்கு அருகேயுள்ள சூரியனார்கோவிலிலிருந்து 5 கி.மீ.தொலைவில் அமைந்துள்ளது. கோயில் காலை 6 மணி முதல் 12 மணி வரை, மாலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை திறந்திருக்கும்.

### முகவரி

அருள்மிகு திருக்கோடீஸ்வரர் திருக்கோயில், திருக்கோடிக்காவல், நரசிங்கன்பேட்டை, திருவிடைமருதூர் வட்டம், தஞ்சாவூர் 609 802.

### தொலைபேசி எண்

91595 14727, 0435 – 2902011

தேவாரப் பாடல் பெற்ற தலங்களில், சோழ நாடு காவிரி வடகரைத் தலங்களில் அமைந்துள்ள, 37வது தலம் இது ஆகும். இறைவனின் திருநாமம் திருக்கோடீஸ்வரர். அம்பாளின் திருநாமம் ஸ்ரீதிரிபுரசுந்தரி.

**தல விருட்சம்:** பிரம்பு மரம்.

**தல தீர்த்தம்:** சிருங்கோத்பவ தீர்த்தம், காவிரிநதி.

திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் இந்த தலத்து பெருமையைப் பற்றி பாடி உள்ளார்கள்

### கோயில் அமைப்பு

கோயிலின் உள்ளே நுழையும்போதே அழகான சிற்பங்கள் இரு புறமும் காணப்படுகின்றன. இடது புறம் அகஸ்தீஸ்வரர் சன்னதி உள்ளது. கொடி மர கணபதி, பலிபீடம், நந்தியைக் கடந்து உள்ளே சென்றால் பஞ்சமூர்த்தி அலங்கார மண்டபம், திரிபுர சுந்தரி அம்மன் சன்னதி உள்ளன. எதிரே




நர்த்தன விநாயகர் உள்ளார். அம்மன் சன்னதியின் வலப்புறம் ஆடிப்பூர அம்மன் உள்ளார். இடப்புறம் பள்ளியறை உள்ளது. அடுத்து நடராஜர் சன்னதி உள்ளது. உள் மண்டபத்தில் வலப்புறம் சித்திரகுப்தரும், இடப்புறம் எமதர்மனும் உள்ளனர். மூலவர் சன்னதிக்கு முன்பாக நந்தியும், பலி பீடமும் உள்ளன. இரு புறமும் துவாரபாலகர்கள் உள்ளனர். வெளித்திருச்சுற்றில் சம்பந்தர், அப்பர், சுந்தரர், பரவை நாச்சியார், சங்கிலியார், கணபதி, நாகர்,விசுவநாதர் விசாலாட்சி, ஏகாம்பரேஸ்வரர் காமாட்சி, வள்ளி தெய்வானையுடன் கூடிய சண்முகேசர் சன்னதிகள், கரையேற்று விநாயகர் சன்னதிகள் உள்ளன. அடுத்து ரிக்வேத லிங்கம், யஜுர் வேத லிங்கம், சாமவேத லிங்கம், அதர்வணவேத லிங்கம் உள்ளன. தொடர்ந்து கஜலட்ஜமி, ஷேத்ரபாலகர்கள், வடுக பைரவர், சூரியன், சந்திரன், நாகேஸ்வரர், சண்டபீடேஸ்வரர், கஹானேஸ்வரர் உள்ளனர். பால சனீ ஸ்வரர் சன்னதி தனியாக உள்ளது

கருவறை கோஷ்டத்தில் நடராஜர், சிவகாமி, கணபதி, தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரம்மா, பிட்சாடனர், அஷ்டபுஜ துர்க்கை, அர்த்தநாரீஸ்வரர், அடுத்த சூரிய மண்டல பிரம்மா ஆகியோர் உள்ளனர். அருகே சண்டிகேஸ்வரர் சன்னதி உள்ளது.

திருக்கோடிக்கா என்று பெயர் அமைந்ததற்குக் காரணம் உண்டு. திரிகோடி என்பதுதான் திருக்கோடி என மருவியுள்ளது. திரிகோடி என்றால், மூன்று கோடி. மூன்று கோடி மந்திரதேவதைகளுக்கு ஏற்பட்ட சாபம் நீங்கப் பெற்று, அவை சாயுஜ்யம் எனும் ஞானமுக்தியை இந்தத் தலத்து இறைவனை வணங்கி வரம் பெற்றதால் திருக்கோடிக்காவல் எனும் பெயர், இந்தத் தலத்துக்கு அமைந்ததாகச் சொல்கிறது ஸ்தல புராணம்.

இக்கோயில் கல்வெட்டுகளிலிருந்தும் கோயில் அமைப்பிலிருந்தும் சுமார் 1250 வருடங்களுக்கு முன்பு கி.பி. எட்டாம் நூற்றாண்டில் (750) தழிழகத்தில் பல்லவர்களுடைய ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்த சமயம். நந்திவர்மபல்லவன் காலத்தில் இக்கோயிலின் கருவறை மட்டும் செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது.

செம்பியன் மாதேவியார் கருங்கற் கோயிலாக திருப்பணி செய்த சமயம் கோயிலில் ஆங்காங்கே சிதறுண்டு கிடந்த பழைய கல்வெட்டுகளைத் திரட்டி எடுத்து அதிலுள்ள விபரங்களை புதியதாகக் கட்டிய கருங்கற் சுவற்றில்

திரும்பவும் செதுக்கச் செய்தார். இவ்வாறு மொத்தம் 26 கருங்கற் பலகைகளைப் பதித்து வருங்கால சந்ததியினர் இக்கோயிலின் வரலாற்றினை அறிந்து கொள்ள பேருதவி செய்துள்ளார்.

பொதுவாக எல்லா சிவன் கோயில்களிலும் காணப்படும் சுதை வேலைபாடுகள் எதுவும் இக்கோயிலில் கோபுரத்திலோ அல்லது மதிற்சுவர்களிலோ காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது

என்னுடைய திருமேனிக்குச் சமமான பெருமை கொண்ட தலம் இது என்று சிவபெருமானால் சிலாகித்துக் கூறப்பட்ட தலம். இது 1008 ஈஸ்வரர்களால் சூழப்பட்ட தலம். இவ்வூரானது வேத்ரவனம் என்று புராணகாலத்தில் அழைக்கப்பட்டுள்ளது

“கா‘ என்றால் சோலை எனப் பொருள்படும். “கா‘ என முடியும் ஐந்து சிவத்தலங்களை “பஞ்ச காக்கள்‘ என அழைப்பர். அவை,

திருஆனைக்கா (திருவானைக்காவல்).

திருக்கோலக்கா (சீர்காழி சட்டநாதர் கோவில் எதிரில்),

திருநெல்லிகா, (திருத்துறைப் பூண்டி),

திருகுறக்குக்கா (நீடூர் அருகில்),

திருகோடிக்கா ஆகும்.

இத்தலத்தில் சிவனை எமதர்மராஜன் பூஜிப்பதால் நவக்கிரகம் கிடையாது. விதியின் பயனை யாராலும் மாற்ற முடியாது. ஆனால் குறைக்க முடியும். விதியினால் கஷ்டப்படுபவர்கள் இத்தலம் வந்து தரிசித்தால் அதன் பாதிப்பு குறையும்

இங்குள்ள சனி பகவான் தலையில் சிவலிங்கம் ஒன்று உள்ளது.

இந்த சனி பகவான் ‘பால சனி’ என்று



அழைக்கப்படுகிறார். பொதுவாக சனி பகவானுக்கு காகம்தான் வாகனமாக இருக்கும். ஆனால் இங்குள்ள பால சனி பகவானுக்கு கருடன் வாகனமாக அமைந்திருக்கிறது. சனிபகவான், எமதர்மராஜன், சித்திரகுப்தன் இவர்கள் மூவரையும் தரிசித்த பின்பு தான் மூலவரை தரிசிக்க முடியும்

நமது பாவ புண்ணிய வரவு செலவு கணக்குப்படி, நமக்கு வருகிற அஷ்டமச்சனி, கண்டச்சனி, அர்த்தாஷ்டம சனி, மரணச் சனி என்ற அனைத்து சனி திசைகளுக்கும், இத்தலம் நிவர்த்தி செய்யும் இடமாகும்.

சனி பகவானுடைய நீதிமன்றமாக திருக்கோடிக்காவல் அமையப்

பெற்றுள்ளது. பால சனீஸ்வரர் நமது பாவ புண்ணிய வரவு செலவு கணக்குகளை ஆராய்ந்து, அதை சித்திரகுப்தன் சரி பார்த்து எமதர்மனால் சொல்லப்பட்ட தீர்ப்புக்கான பரிகார நிவர்த்தி இத்தலத்தில் செய்யப்படுகிறது.

சனீஸ்வரனின் மனைவியான ஜேஷ்டாதேவி, மகன் மாந்தி, மகள் மாந்தாவுடன் உள்ள சிலை உள்ளது. மாந்தாவின் கையில் தாமரை மலரும், மாந்தியின் முகம் ரிஷப முகமாயும் அமைந்துள்ளது, இம்மூன்றும் ஒரே கல்லில் செதுக்கப்பட்டு அற்புதமாய் காட்சியளிக்கிறது

திருக்கோடிக்காவல் வடுக பைரவர் : திருக்கோடிக்காவல் திருத்தலத்தின் மிகவும் பிரசித்தமான சந்நிதி, வடுக பைரவர் ஆவார். சிவபெருமானின் 64 வடிவங்களில் பைரவமூர்த்தியும் ஒருவர். பைரவரைச் சரணைந்தவர்கள் காலச் சுழலில் சிக்கித் தவிக்காது மோட்சம் அடைவர் என்பது நம்பிக்கை. அதேபோல தீராத நோய், கடன், பயம் ஆகியவற்றையும் நீக்கி அருள்பவர் வடுக பைரவர். சனிபகவானின் குருவாகவும், காலத்தை கட்டுப்படுத்திடும் தேவனாகவும் இருப்பவர் பைரவர். பன்னிரண்டு ராசிகள், அஷ்ட திக்குகள், பஞ்ச பூதங்கள், நவகிரகங்கள் என எல்லாவற்றையும் கண்காணிக்கும் தெய்வமாகவும் விளங்குபவர் பைரவர். எனவே பைரவரை வழிபட்டால் அனைத்து கிரக தோஷங்களும் நீங்கும் என்பது நம்பிக்கை. அகங்காரத்தை அழிக்கும் கடவுளாகவும், சுக்கிர தோஷத்தை நீக்கும் இறைவனாகவும் பைரவர் விளங்குகிறார். அஷ்டமி நாளில் இவரை வணங்கினால் எண்ணியது நடக்கும். தடைகள் யாவும் விலகும். ஏழரைச் சனி, அஷ்டமச் சனி ஆகியவற்றால் உண்டாகும் தீமைகள் அனைத்தும் நீங்கி நன்மையாக முடியும். தாமரை, வில்வம், தும்பை, செவ்வந்தி, சந்தன மாலைகள் பைரவருக்கு விருப்பமானவை. பரணி நட்சத்திரத்தில் பைரவர் அவதரித்தவர் என்பதால் பரணி நட்சத்திரக்காரர்கள் இவரை வணங்கினால் நன்மைகள் அதிகரிக்கும்.

புரட்டாசி மாதம் இரண்டாவது சனிக்கிழமை திரிபுரசுந்தரி அம்பாள் பெருமாள் ஆக காட்சியளித்து பக்தர்களுக்கு அருள் தருவார்

திருகோடிக்கா என்ற ஒலியை காதால் கேட்டவர்களைக் கூட தண்டிக்கும் உரிமை யமனுக்கு இல்லை என்றும், அந்த மண்ணை மிதித்தவர்களிடம் அவன் நெருங்கவே கூடாது என்றும் சிவபெருமான் கட்டளை யிடுகிறார். காசியைப் போல இத்தலத்தில் வாழ்பவர்களுக்கும் யமபயம் கிடையாது. இன்றுவரை இவ்வூரில் மயானம் தனியாக இல்லை இங்கு இறப்பவர்களுக்கு

அமைதியான மரணம் தான் நிகழ்கின்றது, துர் மரணங்கள் இல்லை, இங்கு இறப்பவர்களை இன்றுவரை பக்கத்து ஊரில் தான் அடக்கம் செய்கிறார்கள்.

எமனின் கை மற்றும் கால்கள் விலங்கால் கட்டப்பட்டுள்ளது. இத்தலத்தில் செய்யும் தியானம், ஹோமம், ஜபம், எல்லாம் மும்மடங்காகப் பலிக்கின்ற பெருமையுடைய தலம். சனிபகவானும் எமனும் எதிரெதிர் சன்னதியில் அருள்கின்ற தலம். அதேபோல் சித்திரகுப்தனும், துர்வாச முனிவரும் எதிரெதிர் சன்னதியில் உள்ள தலம்.

(தொடரும்)

## திவ்ய தேச கவிதை தரிசனம்

# திருவழுந்தூர் என்ற தேரழுந்தூர்





**அழ. மணிமேகலை,**
காரைக்குடி

நூற்றெட்டு திவ்ய தேசங்களுள் இருபத்து நான்காவது திவ்ய தேசம், திருச்சிறுப்புலியூர். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்திநான்காவது திவ்யதேசமாகும். மயிலாடுதுறை யிலிருங்து கொல்லுமாங்குடிக்கு சென்று அங்கிருந்து சுமார் இரண்டு மைல் தொலைவு நடந்தால், இப்பதியை அடையலாம்.

ஒருகாலத்தில் கருடனுக்கும், ஆதிசேஷனுக்கும் தம்மில் யார் பெரியவர் என்பதில் வாக்குவாதம் ஏற்பட்டது. வாக்குவாதம் இறுதியில் யுத்தத்தில் வந்து நின்றது. எல்லா இடத்திலும் சுற்றித் திரிந்து, ஆதிசேஷன் இவ்விடம் வந்து சேர்ந்தார். பெருமாள், ஆதிசேஷனை தன்னிடம் வைத்துக் கொண்டு, ஆதிசேஷனுக்கு, புஷ்கரணியின் கரையில் தனிச்சன்னதியைக் கொடுத்தார். அப்போது கருடனும் சுற்றிக் கொண்டு வந்தார். அவ்வாறு வருகையில், தனிச் சன்னதியில் இருந்த ஆதிசேஷனை நோக்கி, ‘நீ எப்படி இங்கே’ எனக் கேட்க, அதற்கு ஆதிசேஷன், ‘நான் இங்கு சௌக்கியமா இருக்கிறேன்; கருடா, நீ சௌக்கியமா?’ எனக் கேட்டார். ‘கருடா, சௌக்கியமா?’



இடத்தில் இருந்து கொண்டால் எல்லாம் சௌக்கியமே என்று கருடனால் சொல்லப்பட்ட தலம், இத்தலம்.

இந்த ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டு பெருமாள், ‘பாலசயனத்தில்’ இத்தலத்தில் எழுந்தருளியுள்ளார்.

இங்கு பூமிக்குக் கீழ் கருடனுக்கு சன்னதியும், மிக உயர்ந்த இடத்தில் ஆதிசேஷனுக்கு சன்னதியும் உள்ளன.

இங்குள்ள,

மூலவர் : சலசயனப் பெருமாள்
உற்சவர் : கிருபா சமுத்திரப் பெருமாள்
என்ற அருமாகடலமுதன்
தாயார் : திருமாமகள் நாச்சியார்
உற்சவத்தாயார்: தயாநாயகித் தாயார்
தீர்த்தம் : மானஸ புஷ்கரணி
விமானம் : நந்தவர்த்தன விமானம்
தலவிருட்சம் : வில்வமரம்
கோலம் : தெற்கு நோக்கிய புஜங்க சயனத் திருக்கோலம்.

திருவரங்கத்தைப்போன்று, இத்தலத்திலும் தெற்கு நோக்கிய சயனம்.இத்திவ்ய தேசம் குறித்துக் காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ. நா.மீனவனார் ‘திருச்சிறுபுலியூர்’ எழுதிய ஐந்து பாடல்களின் பொருளும், பாடல்களும் பின்வருமாறு.

1. நெருப்பு, நீர், கரியமேகம் ஆகிய அனைத்தின் உருவமும் ஆனவன் திருச்சிறுபுலியூரில் சலசயனப்பெருமாளாய் அமர்ந்திருக்கின்றான். தாமரையில் வாழ்கின்ற திருமகளின் நாயகனாம், அப்பெருமானை வணங்கி வாழ்வோம்

கனலுருவாய்ப் புனலுருவாய்க் கரியமா
முகிலுருவாய்
அனைத்துருவும் ஆனான்தான்
அமர்ந்ததிருச் சிறுபுலியூர்
எனும்பதிவாழ் சலசயனன்
எனும்பெருமாள் தாமரைவாழ்
தனமகளின் நாயகனைத்
தான்வணங்கி வாழுமினே.

2. வியாக்கிரபாதர் என்னும் முனிவர், தனக்கு மோட்சம் வேண்டுமென்று, பின்பற்றுவதற்காக, முனிவர், தன் தவவலிமையால் பெற்ற, விரைந்து

செல்லும் புலியின் கால்களைக் கொண்டு, அவரைப் பின்தொடர்ந்தார். இவ்வாறு, வியாக்கிரபாதர், புலியின் கால்களைக் கொண்டு, இத்தலத்திற்கு வந்து மோட்சம் பெற்றதால், இவ்வூர் சிறுபுலியூர் ஆயிற்று. இவ்வாறு, இத்தலத்தின் பெருமானை பூஜித்து, வைகுந்தம் அடைந்த வியாக்கிரபாதரை, பெருமாளின் திருவடிகளுக்கு அருகிலேயே
பிரதிஷ்டை செய்துள்ளனர்.

இவ்வாறு வில்லிபாரதம் தந்த வியாசருக்கும், வியாக்கிரபாத முனிவருக்கும் வேகமாக ஓடிவந்து உதவி அருள்செய்த பெருமான், இவ்வுலகையே தன் ஒரு அடியால் அளந்த பெருமான், பாம்பைப் படுக்கையாய்க் கொண்ட பெருமான், திருமாமகள் நாச்சியாருடன் சேர்ந்து அருள்பாலிக்கும் பெருமான், சிறுபுலியூர் என்னும் இத்தலத்தில் உறைந்திருக்கின்றான். அதனால் இத்தலத்தை என்றென்றும் வணங்குவோம்.

நல்லதிரு மாமகளாம் நாச்சியார் உடனாய

வில்லியான் வியாசருடன் வியாக்கிர பாதருக்கும்

ஒல்லைவந் துதவியருள்

உரகணையான் உலகளந்த

எல்லையிலாச் சிறுபுலியூர்

என்றென்றும் வணங்குமினே.

3. நாகதோஷ நிவர்த்தியும், புத்திர சந்தான விருத்தியும் இத்தலத்திற்கு ஏற்பட்ட தனிமகத்துவம். ஆதிசேஷனுக்குத் திருமஞ்சனம் செய்து, பால் பாயாசம் நிவேதனம் செய்தால், நாகதோஷத்திலிருந்து நிவர்த்தி பெறலாம். இவ்வாறு நாகத்தால் வரும் பாவங்களை அகற்றிக் காக்கும் பெருமான், அழகுடைய புதல்வர்களைப் பெற வரமருளும் பெருமான், விண்ணுடனே மண்ணையும் சேர்த்தளந்த பெருமான், சிறுபுலியூரை மதித்து வந்து அமர்ந்திருக்கின்றான். அவ்வாறு இத்திருப்பதியில் அமர்ந்திருக்கின்றவனை, பாகு போன்ற இனிமையான சொற்களைச் சொல்லிப் போற்றுவோம்.

நாகத்தால் வரும்பாவ நலிவகற்றிக் காப்பவனாய்

வாகுடைய புதல்வர்பெற வரமருளும் பெருமானாய்

மாகமுடன் மண்ணளந்தான்

சிறுபுலியூர் மதித்துவந்தான்

பாகனைய சொல்லிதிருப் பதியானைப் போற்றுமினே.

4. திருமங்கையாழ்வார் மட்டும் இத்தலத்துப் பெருமானைப் பத்துப் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். புஜங்க சயனத்தில் மிகச்சிறிய உருவமாய் சயனித்திருந்தார் சலசயனப் பெருமாள்.

அதனால் திருமங்கையாழ்வார் தமக்குள் குறைபட்டுக்கொண்டார். இவரது குறைதீரப் பெருமான், தனது மிகப்பெரிய உருவைத் திருக்கண்ணமங்கையில் காட்டினார்.

சிறுபுலியூர் என்னும் இத்தலம் சிறியதாயிருந்தாலும், இங்கு சயனித்திருக்கும் பெருமாள்; சிறியவராய் இருந்தாலும், இம்மண்ணின் மக்களுக்குக் கருணைக் கடலைப் பொழிகின்ற, கிருபா சமுத்திரப் பெருமாளாய், அருமாகடலமுதனாய் அருள்பாலிக்கின்றான். இம்மண்ணளந்த பெருமானின் சேவடிக்கு, திருமகளைத் தன் மார்பில் உடைய பெருமானின் சேவடிக்கு, திருமங்கையாழ்வார் பாசுரங்களைச் சமர்ப்பிக்கின்றார். அவர் பாடுகின்ற தமிழைக் கேட்டு அருள் பொழியும் கண்ணனது காலடிகளைக் கண்டு கைகுவிக்க வாருங்கள்

மண்ணவர்க்கே அருள்கின்ற
மாகடலாய் சிறுபுலியூர்
மண்ணளந்தான் திருமருவு
மார்புடையான் சேவடிக்குப்
பண்ணுகந்த பரகாலன் பாடுதமிழ்
கேட்டருளும்
கண்ணனது கழல்கண்டு கைகுவிக்க
வாருமினே.

5.வண்ணக் கொடிமாடங்கள் இருக்கின்ற சிறுபுலியூரில் அமர்ந்து நமக்கருள் செய்து கொண்டிருக்கின்ற நாராயணனின் சேவடிகளைக் கண்ணால் கண்டு, கரங்கள் குவித்துச் சேவித்தால், நமக்கு அவன் அருள் தருவது நிச்சயம். அதனால் அவனிருக்கும் திசைநோக்கித் தொழுதிடுங்கள்.

வண்ணக் கொடிமாடம் வயங்கும்
சிறுபுலியூர்
நண்ணி நமக்கருளும் நாரணன்தன்
சேவடிகள்
கண்ணாலே கண்டுநாம் கரங்குவித்து
சேவித்தால்
திண்ணமுடன் அருள்தருவான்
திசைநோக்கி தொழுதிடுமின்

கரிய பெரிய மேக நிறத்தவனே! நெருப்பைப் போல் வடிவம் உள்ளவனே! நீர் போல் குளிர்ந்த உருவம் உடையவனே! பெரிய மலை போல் இருப்பவனே! எல்லாப் பொருள்களின் வடிவாகவும் உள்ளவனே! உனக்கென்று விஷ்ணு உருவமுள்ளவனே! திருமகள் கொலுவிருக்கும்

சிறுபுலியூர்ச் சலசயனத்து பெறற்கரிய கடலமுதே! உனது திருவடிகளே எனக்குப் புகலிடமாகும் என்று அருமாகடலமுதனின் திருவடிகளைச் சரணமாகப் பற்றிக் கொண்ட திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்:

கருமா முகிலுருவா! கனலுருவா!
புனலுருவா!
பெருமால் வரையுருவா! பிறவுருவா!
நினதுருவா!
திருமாமகள் மருவும் சிறு புலியூர்ச்
சலசயனத்து
அருமா கடலமுதே! உனது அடியே
சரணாமே!

# பெரியபுராணக் கதைக் களம்

## பகுதி – 5

அன்பர்களே !

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாக பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாக காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

நவராத்திரியை முன்னிட்டு 3.10.2024 முதல் தொடங்கி ஒன்பது நாட்களும் அருள்மிகு சிவகாமி அம்மனுக்கு அபிஷேக, அலங்கார, ஆராதனைகள் சிறப்பாக நடைபெற்றன.

வரும் 16.10.24 அன்று அருள்மிகு சிவகாம சுந்தரி அம்மன் உடனுறை ஸ்ரீ ஆனந் நடராஜப் பெருமானுக்கு புரட்டாசி மாத சதுர்தசி திதியில் மகா அபிஷேகம் சிறப்பாக நடைப்பெற்றது .

## ஐப்பசி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 19.10.24 | கார்த்திகை | மாலை | ஆறுமுகர் வழிபாடு |
| 20.10.24 | சங்கடஹர சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 24.10.24 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 29.10.24 | பிரதோஷம் | | |
| 9.11.2024 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 11.11.2024 | வளர்பிறை ஏகாதசி | மாலை | பெருமாள் வழிபாடு |
| 13.11.2024 | பிரதோஷம் | | |
| 15.11.2024 | பௌர்ணமி | | |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

**வினா – 1**

சுந்தர மூர்த்தி நாயனார் வரலாறு குறித்த விளக்க வேண்டுகிறோம்?

**விளக்கம்**

🔗

**வினா – 2**

ஆண் நாயன்மார்கள் பல இடங்களில் தங்களை பெண்பாலாக பாவனை செய்து இறைவனை வழிபடுவது குறித்து விளக்க வேண்டுகிறோம்?

**விளக்கம்**

🔗

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 44,000 க்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.



# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்




கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 5316 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

நம் இணைய நூலகம் அமைந்துள்ள archives.org என்ற தளம் முடக்கப்பட்டதால், நம்மால் புதிய பதிவேற்றம் செய்ய இயலவில்லை ஆனால்,சுமார் 250 நூல்களுக்கு மேல் scan செய்து வைத்துள்ளோம்.

இறையருளால்,அண்மையில் நம் நூல்களை பார்க்கவும் பதிவிறக்கம் செய்யவும் அனுமதியளிக்கப் பெற்றுள்ளது ஆகவே, அக்டோபர் 10ம் தேதி வரை நாம் பதிவேற்றம் செய்த 5318 நூல்களும் இப்போது பார்க்கலாம், பதிவிறக்கம் செய்யலாம் .விரைவில் நம்மிடம் உள்ள இதர நூல்களும் பதிவேற்றம் செய்ய இயலும் என்று நம்புகிறோம். இந்தத் தளத்திற்கு மாற்று தளமும் பரிசீலனையில் உள்ளது.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை – கார்த்திகை

திருநெல்லை – மார்கழி

திருநெல்லை – தை

திருநெல்லை – மாசி

திருநெல்லை – பங்குனி

திருநெல்லை – சித்திரை

திருநெல்லை – வைகாசி

திருநெல்லை – ஆனி

திருநெல்லை – ஆடி

திருநெல்லை – ஆவணி